# கலைமகள் கலைக்கூடம்





புலவர் செ. இராசு எம்.ஏ.,

## BIBLIOGRAPHICAL DATA


| | |
|---|---|
| Title of the Book | Kalaimagal Kalaikoodam |
| Author | Pulavar S. Rasu M. A., |
| Language | Tamil |
| Edition | First |
| Date of Publication | 8 th March 1981 |
| Copy Right Holder | Ashogan Pathippagam |
| Paper used | Double crown, white print |
| Size of the Book | 18.2X12 4 |
| Printing points used | 10 Pt. |
| No. of Pages | 244 |
| Printed Block Pages : | 60 |
| No. of copies | 1200 |
| Printer | Kanaka Dhruga printers, Madras-96 |
| Binding | Cord Board Binding |
| Price | 17-50 |
| Publicher | Ashogan Pathippagam Madras-600096 |
| Subject | Archaeological Subjects |

# கலைமகள்
# கலைக்கூடம்

புலவர் செ. இராசு எம்.ஏ.,




அசோகன் பதிப்பகம்

121, திருமலை நகர்,
சென்னை - 600 096
போன் : 414342



தமிழ்நாடு முதலமைச்சர்
மாண்புமிகு, டாக்டர் எம். ஜி. இராமச்சந்திரன்
அவர்கள்




தமிழ்நாடு முதலமைச்சர்

மாண்புமிகு, டாக்டர் எம். ஜி. இராமச்சந்திரன்

அவர்கள் அன்புடன் உவந்தளித்த

# வாழ்த்துரை

பெரியார் மாவட்டம், ஈரோடு கலைமகள் கல்வி நிலையத்தில் "கலைமகள் தொல்பொருள் கலைக் கூடம்" அமைத்து அது தொடர்பாகச் சிறப்புமலர் வெளியிடவிருப்பது அறிகின்றேன். மாணவர்களுக்குத் தொல்பொருள்களின் சிறப்பையும் வரலாற்றுப் பின்னணியினையும் அறிவுறுத்தல் அவசியப்பணியாகும். இவ்வகையில் கலைமகள் கல்வி நிலைய நிர்வாகத்தினர் மேற்கொண்ட முயற்சியைப் பாராட்டுவதுடன் அவர்களின் இப்பணி சிறந்திட என் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எம். ஜி. இராமச்சந்திரன்






கல்வித்துறை அமைச்சர்

மாண்புமிகு செ. அரங்கநாயகம்

அவர்கள் அன்புடனளித்த

# வாழ்த்துரை

நூல்கள் பல வகைப்படும். சிற்ப நூலைப் பற்றி நாம் ஆழ்ந்து நினைத்துப் பார்த்ததுண்டா? அந்த நூலின் அற்புதம் சின்னச்சின்ன ஊரில் கூட இன்றும் காணலாமென ஒரு கவிஞர் கூறினாலும், தமிழ் நாடெங்கணும் பரவியுள்ள

எண்ணற்றச் சிற்றூர்களுக்குச் செல்ல ஒவ்வொருவருக்கும் வாய்ப்புண்டா? சூழ்நிலை அமையுமா? பண வசதி கிட்டுமா? ஈடுபாடுதான் எவ்வளவிற்கு இருக்கும்?

ஆனால் ஒரு சிறு இடுக்கணும் குறுக்கீடு செய்யாது அவற்றினை ஈரோட்டுக் கலைமகள் கலைக்கூடத்தி லுள்ள தொல்பொருளாராய்ச்சிப் பிரிவில் நாம் கண்டு மகிழ லாம்; நம் அறிவினைப் பெருக்கலாம்; ஊக்கத்தினை உந்தலா மென்ற உண்மையினைக் "கலைமகள் கலைக்கூடம்" என்னுந் தலைப்பிற் ஈரோடு புலவர் செ. இராசு. எம். ஏ., அவர்களால் தொகுக்கப்பெற்று 'அசோகன் பதிப்பகம்.' எஸ். நடராசனாரால் வெளியிடப்பட்டுள்ள இச் சிறு நூல் நமக்கு நன்கு அறிமுகப்படுத்துகிறது.

கலைக்கூடம் பிறந்த கதையே ஒரு சுவையான செய்தி. ஐயா எஸ் மீனாட்சிசுந்தரனாரவர்கள், கலைக் கூடத்தின் தலைமை ஆசிரியை அன்னை செல்வி முத்தையா அம்மை யார், முதலியோர் பலருடைய பலனெதிர் நோக்காப் பெருந் தொண்டினை ஆசிரியர் புலவர் செ. இராசு சிறப் பாகவும், படிப்போர் உள்ளத்தினைத் தொடும் வண்ணமும் எழுதியுள்ளார்.

'கலைமகளில்' காணக் கிடைக்கும் தொல்பொருள்களை-முதுமக்கள் தாழிகள், மண்பாண்டங்கள், சங்கும் பிற அணிகளும், செப்புத் துண்டங்கள், மண் ஓடுகள், கல்லா யுதங்கள், கல்வெட்டுகள், நாணயங்கள். கற்சிலைகள் முதலிய சிறு சிறு பகுதித் தலைப்புக்களின் கீழ் பொருத்த மாக-விளக்கமாக-செய்திகளை அடுக்கிச் சொல்லியுள்ளார்.

மண்பாண்டங்கள் சில உட்புறம் கறுப்பு நிறமும், வெளிப் பக்கம் சிவப்பு நிறமுமமைந்துள்ளவாறு எங்ஙனம் செய்யப் பட்டனவென்பது புரியாப் புதிரும், வியத்தகு வினையுமாகும்.

'கிழங்க நாடு' என்ற பெயர் எங்ஙனமமைந்தது என்ற வினாவிற்கு, கல்வி நிலையத் தொல்பொருள் கலைக்கூடத் தின்கண்ணுள்ள கல்வெட்டொன்று நல்லதொரு விடையை நமக்களிப்பது தொல்பொருளாராய்ச்சியின் பயனுறு சிறப்

பினை வெளிப்படுத்துவதாகவும் அமைகிறது. புதுமைகாணும் விருப்புடன் கல்வெட்டு எழுத்துக்கள் அமைந்துள்ளமையை இந்நூல் நன்கு எடுத்து நவில்கிறது.

ஒரு சிற்பம் கொங்கு நாட்டின் சமய சமுதாய நிலைகளை ஆய்வதற்கும், ஆடையாபரண நிலைகளைப்பற்றித் தெரிந்துகொள்வதற்கும் சிறந்ததோர் ஆதாரமாயமைந்திருப்பதை ஆசிரியர் அழகாகக் குறிப்பிட்டுள்ளார்.

அறத்தின்பால் பண்டை மக்கள் கொண்டிருந்த ஈடுபாட்டினைச் சில கல்வெட்டுகள் "அறம் மறவற்க" "அறமல்லது துணையில்லை" யென்றுஞ் சுட்டிக் காண்பித்திருப்பதை நூலாசிரியர் அழகாகச் சுட்டியுள்ளார்.

மத்திய அரசு தொல்பொருட் துறை, மாநிலவரசு தொல்பொருட் துறை, பல்கலைக் கழக வரலாற்றுத் துறை, பல நாட்டுப் பேரறிஞர்கள், கல்வித் துறையினர்-இப்படியாக பலராலும் போற்றப்படும் விலைமதிக்கவொண்ணாப் பல திறப்பட்ட நற்செல்வங்களைத் தன்னகத்தே இப்பொழுது அடக்கி வைத்துள்ள ஈரோட்டுக் கலைமகள் கலைக்கூடத்திற்கு நாமனைவரும்-காசிக்கு, ராமேஸ்வரத்திற்குத் தலயாத்திரை செல்வதுபோன்று-நம் குடும்பத்தினருடன் ஒரு யாத்திரையாகவே செல்ல வேண்டுமென்ற ஒரு பேரவாவைத் தூண்டுகின்ற இந் நூலினை அழகாக வெளியிட்டுள்ள 'அசோகன் பதிப்பகத்தாரின்' வியத்தகு, பயன் நல்கும் நற்பணி மேலுஞ் சிறக்க, தமிழ் நாடு தொடர்ந்து பெற, உளமார வாழ்த்துகிறேன்.

விலை மதிக்கவொண்ணாப் பல்வகை நற்செல்வங்களைத் தன்னகத்தே கொண்டுள்ள கலைமகள் கலைக்கூடம் பற்றிய நூலை வெளியிடுவதை அறிய யாம் பெரிதும் மகிழ்வுறுகிறோம். இப்பணியில் ஈரோடு கலைமகள் கல்வி நிலையம் பெண்கள் உயர்நிலைப்பள்ளி நல்லதொரு வெற்றி காண வாழ்த்துகிறேன்.

**செ. அரங்கநாயகம்**






போக்குவரத்துத்துறை அமைச்சர்

மாண்புமிகு சு. முத்துசாமி

அவர்கள் அன்புடனளித்த

# வாழ்த்துரை

வெள்ளத்தாலும் போகாத, வெந்தணலாலும் வேகாத, கொடுத்தாலும் குறையாத அரிய செல்வம்—பெரிய செல்வம் கல்விச் செல்வம். இச் செல்வம் சிறந்த முறையில் கற்பவர் உள்ளம் நிறைவுடன் கற்றிடும் நெறியில் புகழ் பெற்றிடும் வகையில் அளித்திடும் கல்வி நிலையமாய் ஈரோடு கலைமகள் கல்வி நிலையம் விளங்கிடக் காண்கிறேன்.

திரு. எஸ். மீனாட்சி சுந்தரனார் அவர்களால் 1945—ம் ஆண்டில் 77 குழந்தைகளைக் கொண்டு தொடங்கப்பட்ட இக்கல்வி நிலையம் இன்று ஏறத்தாழ 4500 பேர் கற்றுவரும் வளர்ச்சியினைப் பெற்றிருக்கிறது. செல்வி முத்தையா அவர்கள் தலைமையில் 140 ஆசிரியைகள் பணிபுரியும் இங்கு கலைமகளே ஆட்சிபுரிகின்றாளோ

என எண்ணிடும் வகையில், நிலையில் பள்ளி இறுதித் தேர்விலே தொடர்ந்து பதினேழு ஆண்டுகளாய் நூற்றுக்கு நூறு வெற்றியினை ஈட்டி புகழ்க்கொடி நாட்டி வருவது பெரியார் மாவட்டத்திற்கே பெருமை அன்றோ.

சஞ்சய்கா எனப்படும் பள்ளிச் சிறு சேமிப்பில் நான்கு ஆண்டுகளாய் தொடர்ந்து இந்தியாவில் முதல் இடம் பெற்றுவரும் பள்ளியாய் "கலைமகள் கல்வி நிலையம்" விளங்குவது தமிழ்நாட்டிற்கே பெருமை அளிப்பதாகும். இந்தியாவில் அறிமுகப்படுத்தப்பட்டுள்ள 45 புதியத் திட்டங்களில் 10 திட்டங்களை அறிமுகப் படுத்தி செயல்படுத்தி பாராட்டுகள் பல பெற்றுவரும் ஒரே பள்ளி தமிழ்நாட்டில் கலைமகள் கல்வி நிலையம் என்பது அறிந்து மிகமிக மகிழ்கின்றேன்.

இங்கு தொல்பொருள் கலைக்கூடம் ஒன்றினை உருவாக்கி புதிய வரலாறு படைக்கும்வண்ணம் பெரியார் மாவட்டத்தில் நொய்யாற்றங்கரையில் கொடுமணல் எனும் பேரூரில் கண்டெடுக்கப்பட்ட கற்களிலும் பவளத் திலும் செதுக்கப்பட்ட மணிகள், பதக்கங்கள், சங்கு வளையல்கள், நுண்கற்கால கருவிகள், சுடுமண் வினாயகர் மற்றும் புதைப்பொருள்களை மாணவிகளைக் கொண்டு சேகரித்து ஆய்வு செய்து வரலாற்று உண்மைகளை வெளிப் படுத்தும் அறிவாலயமாய் காட்சி அளிக்கிறது.

கலைமகள் தொல்பொருள் கலைக்கூடம் தொல்பொருள் ஆய்வு மையமாக அறிவிப்பது பற்றியும் தொல்பொருள் ஆய்வுபற்றி சீரிய முறையில் ஆய்வு செய்து கண்ட உண் மைகளைத் தொகுத்து எல்லாருக்கும் பயன்படும் வகையில் 'கலைமகள் கலைக்கூடம்" எனும் பெயரில் ஏடொன்று புலவர் இராசு அவர்களால் எழுதப்பெற்று, அசோகன் பதிப்பகத்தாரால் உருவாக்கப் பெற்றது கண்டு மகிழ்கிறேன்.

கலைமகளின் கல்வித் திருப்பணி வளர்க!

கல்லூரியாய், பல்கலைக்கழகமாய் வளர வாழ்த்துகின்றேன்.

சு. முத்துசாமி



தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வுத்துறை இயக்குநர்,
டாக்டர் இரா. நாகசாமி அவர்கள்
உவந்தளித்த

# பாராட்டுரை

செயற்கரிய செயல்களைச் செய்தவர்கள் அழியாப் புகழுடம்பெய்தி அமரர்களாகி இவ்வுலகில் என்றென்றும் நிலைத்து நிற்கின்றனர். அவர்கள் தோற்றுவித்த நிறுவனங் கள், அவர்கள் ஊக்குவித்த இளைஞர்கள், வழிப்படுத்திய சிறார்கள், விட்டுச் சென்றுள்ள கருத்துக்கள் இவற்றின் மூலம் அவர்கள் வாழ்கின்றனர். இவர்களையே சான்றோர்கள் என்று புகழ்கிறது வையம்.

சான்றோர்களுக்கெல்லாம் தலைவராகத் திகழ்ந்தவர்கள் "ஐயா" என அன்போடு அழைக்கப் பெற்ற "எஸ். மீனாட்சி சுந்தரம்" அவர்கள். அவர்கள் உருவாக்கிய கலைமகள் கல்வி நிலையம், தமிழகத்தில் கல்வி நிலையங்களுக்கு எல்லாம்

முன்னோடியாகத் திகழ்கிறது. கலைமகள் கல்வி நிலையம் என்றாலே அதைப் போற்றாதார் தமிழகத்தில் இல்லை.

கல்விக்கு உறுதுணையாக பல புதிய பிரிவுகள் உருவாகி வருகின்றன. ஆதாரங்களின் அடிப்படையில் விஞ்ஞான வழியில் அறிவைப் பெறுவதே பண்டைய இந்தியர் போற்றிய மரபு. விஞ்ஞானத்தையே பரம்பொருள் என்று உபநிடதங்கள் கூறுகின்றன. அவ்வறிவைத் தர அயராது உழைக்கும் தலங்கள், பள்ளிகள்! தமிழகத்தைப் பொறுத்த வரை, வரலாறு, கலை, பண்பாடு, முதலியவற்றை எடுத்துக் கூறும் தங்கள் காட்சிக் கூடங்கள் கோயில்களே. அங்கு கல்வெட்டுகள் உண்டு. இவற்றின் அடிப்படையில்தான் வரலாற்றை அறிய இயலும்.

கோயில்களில்தான் சிற்பங்கள் உள்ளன; செப்புத் திரு மேனிகள் உள்ளன; இயல், இசை, நாடகம் போன்ற கலைகள் எல்லாம் மலர்ந்தன நமது நாட்டு வரலாற்றை கோயில்களே பறை சாற்றுகின்றன. ஆதலின்தானோ என்னவோ அமரன் பாரதி பாடினான், "பள்ளித் தலமனைத்தும் கோயில் செய்குவோம்" என்று. அவ்வளவு புண்ணிய இடமாக பள்ளியை உருவகித்தான் அப்பெரும் கவிஞன்.

அங்கு கற்கும் சிறார்களின் மனத்தே அதன் சிறப்பை நிலை நிறுத்த உதவுபவை கல்வெட்டுகளும், கலைப்பொருள்களுமாம். அவற்றைப் பார்க்கும் சிறுவர்கள் என்றென்றும் வரலாற்றையோ கலையையோ மறக்கமாட்டார்கள். அவை தமிழகத்தில் எங்கும் நிறைந்துள்ளன. ஆனால் அவற்றை பயன்படுத்தவோ, அறிந்து கொள்ளவோ முயற்சி மேற்கொள்ளாத நிலையே நம்மிடையே நிலவுகிறது.

கல்வியின் இருப்பிடமாம் கலைமகள் நிலையம், தமிழகக் கல்வி நிறுவனங்களுக்கு வழிகாட்டுவதுபோல கலைக்காட்சிக் கூடம் அமைத்துள்ளது. அதன் தனித்தன்மையை எடுத்து

1068



இயம்புகிறது. இதை அமைக்க நண்பர் 'புலவர் இராசு' முயற்சிகள் மேற்கொண்டு ஒரு சிறந்த கூடத்தை அமைத்துள்ளார். அவருக்கு உதவிகள் புரிந்து ஊக்குவித்துள்ளார்கள். அக்கல்வி நிலையத் தலைவி செல்வி முத்தையா அவர்கள். இவர்தம் ஆற்றலும் உழைப்பும் ஊக்கமும் கல்வியுலகில் நிலையானதாக விளங்குகிறது.

ஒவ்வொரு பள்ளியிலும் இது போன்ற வரலாற்றுக் கூடங்கள் அமைக்க வேண்டாமா? நம்மிடம் வரலாற்றுச் செல்வங்களா இல்லை? ஒவ்வொரு பள்ளிக்கும் அம்மையார் போன்ற தலைமையேற்போரும், ஒவ்வொரு ஊரிலும் ஒரு இராசுவும் இருந்தால் போதுமே! பள்ளிக்கூடங்கள் அறிவுக் கோயில்களாக மாற்றப்பட்டுவிடும்! அதற்கு அமரத் தன்மை ஏற்படும். கலைமகள் கலைக்கூடத்தை உருவாக்கிய பெரியாரை, "ஐயாவை" வாயால், மனத்தால் வணங்கி வாழ்த்துகிறோம்.

அவரது தலைமையில் வரலாறு குறித்துப்பேசும் பேற்றை ஒரு முறை நான் பெற்றேன். அந்நினைவு என் மனத்தே நிலைத்து நிற்கும் பசும் நினைவு. அவர் உருக்கொடுத்த அறிவுச்சுடர், நுந்தா விளக்காய் ஒளி விட்டு இருள் அகற்றுகிறது. அவர் நினைவை வாழ்த்துகிறேன்.

'ஐயா' வின் நினைவுக்குச் சின்னமாய் இந்நூலை உருவாக்கிய அசோகன் பதிப்பகத்தாரையும் போற்றுகிறேன்.

இரா. நாகசாமி



பள்ளிக் கல்வி இயக்குநர்

டாக்டர் கி. வேங்கடசுப்பிரமணியன், எம். ஏ.,
பி. எல்., பி டி. பிஎச். டி.,

அவர்களின்

# அணிந்துரை

"கலைமகள் கலைக்கூடம்" என்னும் நூலைக் கண்ணுற்றேன். ஒரு நல்ல நூலைப் படித்த மன நிறைவு எனக்கு ஏற்பட்டது. புலவர் செ. இராசு எம். ஏ., அவர்கள் பெருமுயற்சி எடுத்து இந்த நூலை எழுதி இருக்கிறார்கள். அவரது முயற்சி மிகவும் பாராட்டுதற்குரியது.

இத்தகைய நூல்கள் மேன்மேலும், அவர் வாயிலாக வெளிவரவேண்டும் என்றும், அதனால் தமிழ் கூறும் நல்லுலகம் மிகுந்த பயன்பெற வேண்டும் என விழைகின்றேன்.

வாழ்க! வளர்க அவர் தம் நற்பணி.

**கி. வேங்கடசுப்பிரமணியன்**

# முன்னுரை

இன்று கொங்கு நாட்டின் கலைச்சிறப்பைக் குன்றின் மேலிட்ட விளக்கு எனக் குவலயம் எல்லாம் பரப்பிவருகிறது கலைமகள் கல்வி நிலையத்தின் கலைக்கூடம்!

ஒரு தொல்பொருள் கலைக்கூடத்திற்கு வேண்டிய அனைத்தையும் பெற்று இந்திய ஆய்வாளர்களையும், பல வெளிநாட்டு நிபுணர்களையும் இந்தியாவில் கவரும் கலைக் கூடமாகத் திகழுகிறது!

வரலாற்றுச் சிறப்புமிக்க இக்கவின்மிகு கலைப் பொருட்களைச் சேகரிக்க முழுமுதற் காரணமாக இருந்தவர்கள் கலைமகள் அன்னை செல்வி. எம் முத்தையா அவர்கள் தான்.

என்னைப் போன்ற சிலர் இலக்கண நூல் கூறுவதுபோல துணைக்காரணமாக – துணையாக இருந்தோம் அவ்வளவே!

1973-ஆம் ஆண்டு மே மாதம் 14-ஆம் நாள் கலைக்கூடம் காண விரும்பிய அருமை ஐயா அவர்கள் மறைந்துவிட்டார்கள். அவரின் மறைவிற்குப்பின் 1975ஆம் சனவரி இறுதியில் கலைக்கூடம் உருவாக்கும் பணியில் அன்னையார் அவர்கள் மிக மிக ஆர்வம் காட்டி முன்னின்று செய்த பணிகளைக் கூறத்தமிழில் எனக்குத் தகுதியான சொற்கள் கிடைக்கவில்லை.

சுருக்கமாக கூற வேண்டுமெனில் தொழுவூர் வேலாயுதம் அவர்கள் வழிகாட்டவில்லையெனில் அருட்பாவும் வள்ளலாரும் இல்லை.

சடையப்ப வள்ளல் ஆதரவு இல்லையெனில் கம்ப இராமாயணமும் கவிச்சக்கரவர்த்தி கம்பரும் இல்லை.

சீயகங்கமன்னன் இல்லையெனில் இலக்கணநன்னூலும் பவணந்தி முனிவரும் இல்லை.

தீரர் சத்தியமூர்த்தி இல்லையெனில் காமராசரும் அவர் தம் அரும்பணிகளும் இல்லை.

அது போல்......

கலைமகள் அன்னை செல்வி. எம். முத்தையா அவர்களின் ஆர்வமும் முயற்சியும் துணையும் உதவியும் இல்லையெனில் கலைக்கூடமும் இல்லை; புலவர் இராசுவின் ஆராய்ச்சியும் இல்லை! இது உண்மை, வெறும் புகழ்ச்சியில்லை!

ஒரு முறை சென்னைக் கருத்தரங்கில் அதியமானைப் பற்றிப் பேச வேண்டிய செய்திகள் சேகரிக்க தருமபுரிக்கு அவர்கள் செலவில் அனுப்பிவைத்தார்கள்!

அண்மையில் குஜராத் மாநிலம் ஆமதாபாத்தில் நடைப் பெற்ற ஒரு அனைத்திந்தியக் கல்வெட்டு கருத்தரங்கில் பேச பெரும் பொருட்கொடை கொடுத்துச் சென்று பேசி வருமாறு பணித்தார்கள்!

இப்படி ஏத்துணையோ நிகழ்ச்சிகள்! பலகாலும் பாரி போல் அவர்கள் வாரி வழங்கிய வள்ளல் தன்மையால் தான்—ஆய்வு நடந்து—தொல்பொருள் இருக்குமிடம் தேடி அவை கலைமகளுக்கு வந்து கவின்மிகு தோற்றம் அளிக்கின்றன.

அவையெல்லாம் கலைக்கூடம் உருவாகிய கதையில் ஓரளவு இடம் பெறுகின்றன. முழுவதும் எழுதினால் அதுவே முழு நூலாகிவிடும்!

அல்லும் பகலும் கலைக்கூடத்தின் வளர்ச்சியையே எண்ணி—ஆக்கப்பணிகள் செய்து என்னையும் என் இனிய நண்பர்கள் பலரையும் இத்துறையில் ஊக்கமூட்டி உதவிகள் பற்பல அளித்து தான் எண்ணியதை எண்ணியாங்கு செய்து முடித்த சாதனையாளர் அன்னையார் அவர்கள்.

வரலாற்றுலகம் அவர்களுக்கு பெருநன்றி செலுத்தும் என்பதில் ஐயமில்லை.

தமிழ்கூறும் நல்லுலகம் உள்ளளவும் கலைக்கூடம் நின்று நிலவி கொங்கு நாட்டின் கலைப்பெருமையையும் காவியப்புகழையும் பரப்பிக் கொண்டிருக்க இறைவன் அருள் புரிவானாக!

இந்நூலை அழகுற படங்களுடன் சிறப்பாக வெளியிட்டுள்ள என் இனிய நண்பரும், அசோகன் பதிப்பக உரிமையாளருமான திரு. நடராசன் என் நன்றிக்கு உரியவர். அழகுற புகைப்படமெடுத்துதவிய நண்பர் திரு. நாகரத்தினம் அவர்களுக்கும் என் நன்றி.

இம்மாபெரும் பணியில் சிறு துணையாக என்னையும் பயன்படுத்தி, எனக்கு நன்னெறி காட்டி, இந்த முயற்சியில் எனக்கும் வாய்ப்பளித்த அன்னையார் அவர்களுக்கு என் மனம், மொழி, மெய்களால் பணிவான வணக்கங்களைக் கூறுகின்றேன்.

புலவர் செ. இராசு

# பதிப்புரை

தமிழகக் கல்வி வரலாற்றில் தனி முத்திரை பதித்த பள்ளி ஈரோடு கலைமகள் கல்வி நிலையம். பல்வேறு வகையில் சிறப்பிடம் பெற்ற கலைமகள் கல்வி நிலையம் கொங்கு நாட்டின் கலைச்செல்வங்களைத் தொகுத்து ஒரு கலைக்கூடத்தை உருவாக்கியிருக்கிறது.

கலைக்கூடம் நிறுவ வித்திட்டவர் ஐயா எஸ். மீனாட்சி சுந்தரனார் அவர்கள். ஐயா அவர்களின் எண்ணத்தைச் செயலாக்கி அரும் முயற்சி செய்து கலைக்கூடத்தை உருவாக்கிய கலைமகள் கல்வி நிலையத் தாளாளரும் தலைமையாசிரியையுமாகிய அன்னை செல்வி. எம். முத்தையா அவர்களும், இம் முயற்சிக்கு துணை புரிந்து நூலை எழுதிய கல்வெட்டு ஆய்வாளர் புலவர் செ. இராசு அவர்களும் பாராட்டுக்குரியவர்கள்.

செல்வி எம். முத்தையா அவர்கள் கலைமகளில் பணியேற்ற 25 ஆண்டு நிறைவு விழாவில் வெளியாகும் இவ்வரிய நூலை வெளியிடும் நல் வாய்ப்புப் பெற்றமையை நாங்கள் பெரும் பேறாகக் கருதி மகிழ்வடைகிறோம்.

இந்நூலுக்கு வாழ்த்துரை வழங்கிய தமிழக முதல்வர் டாக்டர் திரு எம். ஜி. இராமச்சந்திரன், தமிழகக் கல்வியமைச்சர் மாண்புமிகு செ. அரங்கநாயகம், போக்குவரத்துதுறை அமைச்சர் மாண்புமிகு சு. முத்துசாமி, தமிழக அரசு தொல்பொருள் ஆய்வுத் துறை இயக்குநர் டாக்டர் ஆர். நாகசாமி, தமிழகப் பள்ளிக் கல்வி இயக்குநர் டாக்டர் கி. வேங்கடசுப்பிரமணியம் ஆகியோருக்கும் எங்கள் மனமார்ந்த நன்றி.

பதிப்பாசிரியர்.

# உள்ளே...



தலைமை அன்னைக்கு
பாரதப் பிரதமர்
இந்திரா காந்தி
பரிசு வழங்குதல்.

கலைமகள் கல்வி நிலையத்தின்
தாளாளரும், தலைமை ஆசிரியையுமான
அன்னை செல்வி முத்தையா.பி.ஏ.,பி.டி.,
அவர்களை
மாண்புமிகு மேலோர் பாராட்டிப்
பரிசு தரும் அரிய காட்சிகள்.





பெருந்தலைவர் காமராஜருடன்
நிறுவனர் ஐயா, அன்னைமுத்தையா.




மேதகு ஆளுநர் பிரபுதாஸ் பட்வாரி அவர்கள் தலைமை அன்னைக்கு ஆள் உயர பாராட்டு மடலை வழங்குகிறார்.



கலைக் கூடத்தை அன்றைய
கோவை மாவட்ட ஆட்சித்தலைவர்
திருமிகு கே. எச். மொஹினுதீன்
திறந்து வைத்தார்கள்.



மாண்புமிகு முதல்வர் திரு.M.G.R.
அவர்கள், தலைமை அன்னையைப்
பாராட்டிப் பரிசு வழங்குதல்.



மாண்புமிகு டாக்டர் நாவலர் நெடுஞ்செழியன்
அவர்கள், தலைமை அன்னைக்துப் பரிசு வழங்கல்.




மாண்புமிகு கல்வி அமைச்சர் செ. அரங்கநாயகம் அவர்கள், தலைமை அன்னைக்குக் குத்துவிளக்கும் கேடயமும் பரிசு வழங்குதல்.



நிறுவனர் ஐயா அவர்களின் வெண்கல நினைவுச் சின்ன மண்டபம், நுழைவாயிலை அலங்கரிக்கிறது.

# கலைக்கூடம் பிறந்த கதை!

'சித்திரத்தின் மிக உயர்ந்த
சிற்ப நூலின் அற்புதம்
சின்னச் சின்ன ஊரில் கூட
நீங்கள் இன்றும் காணலாம்!'

என்று பாடிப் பெருமகிழ்வெய்தினான் ஒரு கவிஞன். அக்கவிஞன் கண்டு – உணர்ந்து பாடினானே, அந்த அற்புதத்தை எத்தனைபேர் காணுகின்றோம்? கண்டு உணருகின்றோம்? ஆயிரத்தில் ஒருவர் கூட இல்லையே! இது மட்டுமா?

புதிய திருப்பணிப் பெருமையில் பண்டைய கலைச் செல்வங்களை அழிக்கின்றோம்! கல்வெட்டுக்களை மறைக்கின்றோம்!

ஒரு கோயிலில் புளியோதரை தயாரிக்கும் பலகை கல்லாக பல்லவர் காலக் கல்வெட்டுப் பயன்படுகிறது. அழிந்து வருகிறது!

மற்றொரு கோயிலில் வாயிற்படியாக அருமையான கல்வெட்டுக் கல் வைத்துக் கட்டப்பட்டுள்ளது! தேய்ந்து சிதைகிறது!

பாண்டியர் பெருமையைப் பறை சாற்றும் கல்வெட்டோன்று அத்திவாரத்துக்குள் புதைக்கப்பட்டது. இன்று இருக்குமிடம் தெரியவில்லை!

கூலிக்கு ஆள்விட்டு பண்டைய சிற்பங்களையெல்லாம் கொத்தி 'அம்மை வடுக்கள்' என ஆலயத்தைச் சில அடியார் ஆக்கினர்!

முற்கால பாண்டியர் கல்வெட்டு வைகையாற்றில் சலவை செய்யும் கல்லாகப் பயன்பட்டு பாங்கிழந்தது!

ஒரு கோபுரத்தில் கொடும்பாளூர் இருக்குவேளிர் சுதைச் சிற்பம் வண்ண வண்ணச் சாந்துகளால் மறைக்கப்பட்டது. பண்டைய பெருமையை இழந்தது!

ஏன்? ஒரு மாவட்டத்தின் தலைநகரில் உள்ள பெரிய கோயிலில் சிறிய 'பின்னம்' என்று காரணம் காட்டி அழகிய அம்மன் சிற்பம் குழிதோண்டிப் புதைக்கப்பட்டது.

வரலாறு கூறும் சிறப்புமிக்க செப்பேடு ஒன்று பாத்திரம் செய்ய உருக்கப்பட்டது! பாதியைக் கைப்பற்றிப் பாதுகாத்து வருகின்றனர்!

இக்கலைச் செல்வங்களுக்கு நேர்ந்த கதி, இலக்கிய இலக்கணங்களைத் தன்னகத்தே உள்ளடக்கிய ஓலைச் சுவடிகட்கும் ஏற்பட்டன.

பண்டைய காலத்தில் கடல்கோளுக்கும் கரையானுக்கும் ஓலைசுவடிகள் இரையாயின.

ஏன் இன்றும் ......

'அக்கினி பகவானின்' கொடிய செந்தீ நாக்குகள் எத்தனை ஆயிரம் ஏடுகளை அழிக்கின்றன.

“பதினெட்டாம் பெருக்கில்” ஆற்றில் விட்டால் புண்ணியம் என்ற பெயரில் பல ஏடுகள் அழிக்கப்படுகின்றன.

இவைகளையெல்லாம் விடக் கொடுமை தென்னாடுடைய சிவனை எந்நாட்டவர்க்கும் இறைவனாக்கும் பெருந்தன்மையோடு(!) தெய்வீகப் படிமங்களையே திருடி வெளிநாடுகட்கு அனுப்புகின்றனர்.

அஜந்தாவிலும், எல்லோராவிலும், தாஜ்மகாலிலும் தஞ்சைப் பெரிய கோயிலிலும்தான் கலை இருப்பதாகக் கண்டுகளிக்கும் பலர் தங்கள் உள்ளூரிலே— தங்கள் வட்டாரத்திலே சிறந்த வரலாற்றுக் கலைச்செல்வங்கள் இருப்பதை உணர்வதில்லை. உணர்ந்தால் மேலே நாம் கண்ட அவலநிலை மாறும்!

உலகின் பிறநாடுகளை— நாட்டின் பிறபகுதிகளைப் பாடத்திட்டத்தில் பயிலும் மாணவமாணவியர் தங்கள் உள்ளூர் வரலாற்றை அறியும் வாய்ப்பில்லை. அறிய வாய்ப்பு இருந்தாலும் ஆசிரியர்கள் பலர் அறிவிப்பதில்லை!

இப்பெருங்குறைகளைக் களைய வேண்டுமானால் மாணவப் பருவத்தில்—இளமையில், நம் கலைப் பொருட்களையும் — வரலாற்றையும்—பண்டைப்பெருமைகளையும் அறிவதற்குத் தக்க ஏற்பாடுகள் செய்ய வேண்டும். ஆம்! நேற்றைய பெருமைதான் நாளைய சிறந்த வழிகாட்டி!

அம்முயற்சியில் ஈடுபடாமல் கண்ணிருந்தும் குருடராக காதிருந்தும் செவிடராக பழம்பெருமையை அறியாமல் காணாமல், கேளாமல் எல்லோரும் தடுமாறுகிறோம். தமிழ் நாட்டுக்கு வரலாறு இல்லை என்று மொத்தமாக அறியாமல் குறை கூறுகிறோம்!

மாணவப் பருவத்தில் அதனை அவர்கட்கு ஊட்டும் பணியில் யார்? எப்படி? எவ்வாறு இயங்குவது? அது இயலுமா? இவை கேள்விகள்!

இக்கேள்விகளுக்கெல்லாம் ஒரேவிடை! இயலும்—இயலும் என்பதே. அல்லது 'கலைமகள் கல்விநிலையம்' என்பதே!

ஆம். கார் இருளில் ஒரு ஒளி!
ஒளிகாட்டும் கலங்கரை விளக்கம்!!
வரலாற்றுலகின் விடிவெள்ளி!!!

கல்வியுலகில் செயற்கரிய பற்பல சாதனைகளைச் செய்து வரும் ஈரோடு கலைமகள் கல்வி நிலையம் பழம் பொருட்களைத் தொகுத்துப் பாதுகாத்து, அதன் பெருமையைப் பிறர்க்கு அறிவிக்கும் மாபெரும் பணியில் ஈடுபட்டுள்ளது. குறிப்பாக மாணவிகள் இதன் மூலம் பழமை பற்றிப் பயின்று பாதுகாக்கவும் ஆராயவும் முற்படுகின்றனர்.

மத்திய அரசு தொல்பொருள் துறை
மாநில அரசு தொல்பொருள் துறை
பல்கலைக் கழக வரலாற்றுத் துறை
அரும்பொருட் காட்சியகத் துறை
வரலாற்று ஆராய்ச்சி அறிஞர்கள்
பிற நாட்டு அறிஞர்கள்
பத்திரிகையாளர்கள்
கல்வித் துறையினர்
பொது மக்கள்

அனைவரும் பார்த்துப் பார்த்து மகிழ்ந்து பண்டைப் பெருமைகளையெல்லாம் உணர்ந்து பாராட்டுகின்றனர்! பரவசமடைகின்றனர்! பாரினில் இதுபோல் எங்குமில்லை என்கின்றனர்.

இந்தப் பெருமை அலாவுதீன் அற்புத விளக்குப் போல் திடீரென்று ஒரே நாளில் ஏற்பட்டதா? இல்லை! ஏறத்தாழ 20 ஆண்டு வரலாறு இந்த வரலாற்றுக் கலைக் கூடத்திற்கு உண்டு. அது நீண்ட நெடிய கதை!

அதைத்தான் இங்கு காணுகிறீர்கள்!

1-3-1961 அன்று செங்குந்தர் உயர்நிலைப் பள்ளியில் மேல்மாடி கட்டிடத் திறப்பு விழா. அதனையொட்டி ஒரு கல்விக் கண்காட்சி நடைபெற்றது.

கண்காட்சியில் பெரும்பாலும் அறிவியல் பொருட்களே அதுவரை அமைக்கப்பட்டு வந்தன. இந்நூலின் தொகுப்பாசிரியர் "செந்தமிழ்ச் சோலை" என்ற பெயரில் தமிழ் வரலாற்றுக் கண்காட்சியொன்றை அமைத்தார். இக்காட்சிக்கு முதல் அறை ஒதுக்கப்பட்டது.

அன்றைய முதல்வர் தமிழ்நாட்டின் கல்விக் கண்ணைத் திறந்த திருமிகு. கு. காமராசர் அதனைத் திறந்து வைத்தார். பாராட்டினார். அவருக்கு அன்று பள்ளியின் சார்பில் ஓலைச் சுவடியிலேயே வரவேற்பிதழ் எழுதி வாசிக்கப்பட்டது.

2-3-1961 அக்கண்காட்சியின் தமிழ்ப் பகுதியை ஐயா எஸ். மீனாட்சி சுந்தரம் அவர்களும், கலைமகள் தலைமையாசிரியை செல்வி. எம். முத்தையா அவர்களும், கலைமகள் மாணவிகளும், ஆசிரியைப் பெருமக்கள் அனைவரும் கண்டு பாராட்டினர். ஐயாவும், தலைமையாசிரியை அவர்களும் ஏறத்தாழ 20 ஆசிரியைகளும் அதனைப் பாராட்டி எழுதினர். பழம்பொருளில் அன்றே முதல் தொடர்பு...... அது இன்றும் தொடர்கிறது. இனி மேலும் தொடரும்....

இரு மொழிச் சொற்கொண்டல், ஐயா எஸ். மீனாட்சி சுந்தரம் அவர்களும், மறைந்த எச். ஏ. பாப்லி அவர்களும் ஏற்படுத்திச் சில ஆண்டுகள் செயல்படாமல் இருந்து மீண்டும் ஐயா அவர்களின் அரும் முயற்சியால் செயல்பட்டு ஈரோடு நகரில் நல்ல பல கல்வித் தொண்டுகள் செய்த ஈரோடு ஆசிரிய ஐக்கிய சங்கத்தின் ஆதரவில் இதே

கண்காட்சி 20-1-1962-ல் மீண்டும் நகராட்சி டவுன் தொடக்கப் பள்ளியில் நடைப்பெற்றது.

மீண்டும் கலைமகள் கல்வி நிலையத்தின் பாராட்டுக் கிடைத்தது. சமயம் நேரம் போதெல்லாம் பழம் பொருள் தொடர்பு தொடர்ந்தது!

சில நாளில் தொகுப்பாசிரியரைக் கலைமகள் பள்ளிக்கே அழைத்து உரையாடி மகிழ்ந்தனர் 'ஐயா' அவர்களும், தலைமையாசிரியை அவர்களும்! அவர்கள் புகழுரை தொகுப்பாசிரியர் இராசுவிற்குப் புது உற்சாகத்தைக் கொடுத்தது!

கலைமகள் கல்வி நிலைய உயர்நிலைப் பள்ளியின் இலக்கிய மன்றத்தில் பேசுமாறு பணித்தனர். அங்கும் உள்ளூர் வரலாறு, கல்வெட்டுத்தான் பேச்சாக அமைந்தது!

செங்குந்தர் உயர்நிலைப் பள்ளியில் 'ஐயா' எஸ். மீனாட்சிசுந்தரம் அவர்கள் சில மாதங்கள் கௌரவத் தலையையாசிரியராக இருந்தார்கள்.

தொகுப்பாசிரியரின், கல்வெட்டுத் தேடிக் கண்டு பிடிக்கும் முயற்சி அப்பொழுதுதான் விரிவாகியது.

ஐயா அவர்களுடன் நெருங்கிப் பழகவும், அடிக்கடி கலைமகள் கல்வி நிலையம் சென்று தலைமையாசிரியை அவர்களுடன் உரையாடவும் வாய்ப்புக் கிடைத்தது. திட்டங்கள் பல உருவானது!

"வ.உ.சி. பூங்காவில் ஒரு கல்வெட்டு இருக்கிறது. சென்று பார்த்து வா" என்று ஒரு நாள் ஐயா கட்டளை பிறப்பித்தார்கள்.

செங்குந்தர் உயர்நிலைப்பள்ளியின் ஓவிய ஆசிரியர் திரு. ஆர். நாகரத்தினம் உட்படச் சில ஆசிரியர்களுடன் சென்று பார்த்து அது "விப ஆண்டு கார்த்திகை மாதம் ஒரு

புண்ணிய தினத்தில் சந்திரமதி முதலியார் மடம்'' ஏற்படுத்திய செய்தி இருந்ததைக் கூறினேன். ஐயா மிகவும் மகிழ்ந்தார்கள். இதழ்களில் அது பற்றிய செய்தி வருமாறு செய்தார்கள்!

ஈரோடு காவிரிக்கரை
விஜய மங்கலம்
குன்னத்தூர்
திருச்செங்கோடு
திங்களூர்

ஆகிய பல இடங்களின் கல்வெட்டுக்கள் ஐயா அவர்கள் ஆணையின் வண்ணம் சென்று ஆய்வு செய்யப்பட்டது. உடனுக்குடன் அவை பற்றிய தகவல்கள் கலைமகள் கல்வி நிலையத்தில் விவாதிக்கப்பட்டன. பல சமயங்களில் கலைமகள் கல்வி நிலையம் வரலாற்று ஆராய்ச்சி நிலையம் போல் திகழும்.

அறச்சலூர் இசைக்கல்வெட்டு கண்டு பிடிக்கப்பட்டது. அனைத்துப் பத்திரிகைகளிலும் அதைப் பற்றிய செய்தி வந்தது. ஐயா அவர்களும் தலைமையாசிரியை செல்வி. எம். முத்தையா அவர்களும் சென்று பார்த்து வியந்தனர். அதைப் பற்றிக் கலைமகள் ஆசிரியைகட்கும் மாணவிகட்கும் அறிவித்தனர்.

அப்பொழுதெல்லாம் கலைமகள் கல்வி நிலைய அரங்கத்தில் ஈரோடு ரோட்டரி சங்கம் வாரந்தோறும் புதன்கிழமை தன் கூட்டத்தை நடத்தும்.

அடிக்கடி ஐயா அவர்கள் அச்சங்கத்தில் பேசும்படி தொகுப்பாசிரியரை அழைப்பார்கள். பேச்சுக்கள் அனைத்தும் கல்வெட்டு, வரலாறு, கொங்குநாடு பற்றியே அமையும். பல்வேறு படங்களுடன், விளக்க அட்டைகளுடன் பேச்சு

ரோட்டரி மரபுக்கு மாறாக, நீண்ட நேரம் நடக்கும். நகரப் பிரமுகர்கள் அடங்கிய அக்கூட்டத்தில் ஐயா தொகுப்பாசிரியரை நன்கு அறிமுகப்படுத்திப் பாராட்டுவார்கள். பலர் தொடர்பு கிடைத்தது. ரோட்டரி சங்கத்தில் வைக்கப் பட்டவை, கலைமகளிலும் பார்வைக்கு வைக்கப்படும்.

ரோட்டரி கூட்டத்திற்கு முன்னும் பின்னும் தலைமை யாசிரியை அவர்களுடன் விளக்கப் பேச்சுகள் நீண்டநேரம் நடக்கும். அவையெல்லாம் ஆர்வமிகு உரையாடல்கள்!

"உங்கள் நகரைத் தெரிந்து கொள்ளுங்கள்" என்ற கண் காட்சி ரோட்டரி முதலிய சங்கங்களில் நடைபெற்றது. கலைமகளிலும் அக்கண்காட்சி வைக்கப்பட்டு உரையும் நிகழ்த்தப்பட்டது. அனைவரும் பாராட்டினர்.

1963-ஆம் ஆண்டு தென்னிந்திய ஆசிரியர் பேரவையும், சென்னை நூலக இயக்கத்தினரும் இணைந்து தல வரலாற்றை மாணவ மாணவிகள் அறிந்து, ஆராயும் ஒரு போட்டியை நடத்தினர். அவர்கள் தமிழ்நாட்டில் ஒன்பது பள்ளிகளைத் தேர்ந்தெடுத்து நடத்தினர்.

அப்பொழுது கலைமகள் கல்வி நிலையத்தில் ஆசிரியையாக இருந்த திருமதி. கல்யாணி ரங்கநாதன் அவர்கள் போட்டியின் பொறுப்பாளராக இருந்தார்கள். தலைமையாசிரியை அவர்கள் சிறந்த முறையில் ஆலோசனை கூறினார்கள்.

ஈரோடு கோயில்கள், பவானி, காலிங்கராயன் அணை, சென்னிமலை, அறச்சலூர் ஆகிய இப்பகுதி வரலாற்றுச் சிறப்புமிக்க எல்லா இடங்களுக்கும் மாணவிகள் சென்று பார்வையிட்டுக் கட்டுரைகள் எழுதினர். தொகுப்பாசிரியரும் உடன் சென்றார். இந்நிகழ்ச்சிகள் பலவற்றுக்கு ஐயா அவர்களும் தலைமையாசிரியை அவர்களும் நேரில் வந்தனர்.

40 பேர் கலந்து கொண்ட அப்போட்டியில் முதல் மூன்று பரிசுகளும் கலைமகள் கல்வி நிலையத்திற்கே கிடைத்தன. கலைமகள் மாணவிகள்,

செல்வி. சி. காந்திமதி
செல்வி. ஆர். பேபி
செல்வி. பி. திலகவதி

ஆகியோர் முதல் மூன்று பரிசுகளைப் பெற்றனர்.

ஏ. முத்துலட்சுமி. எஸ். ஜெயலட்சுமி ஆகிய மாணவிகள் பாராட்டுப் பரிசு பெற்றனர். 14-3-1964 ஆம் ஆண்டு அப்போதைய முதல்வர் திருமிகு. பக்தவத்சலம் அவர்கள் பரிசளித்துப் பாராட்டினார். பத்திரிகைகள் புகழ்ந்தன.

கலைமகள் கல்வி நிலையத்திற்கு வரும் அமைச்சர்கள், உயர் அலுவலர்கள், பிற பிரமுகர்கட்குத் தொகுப்பாளர் வரலாற்று ஆய்வாளர் என்று அறிமுகப் படுத்தப்பட்டுப் பாராட்டப் பெற்றார்.

சாரண இயக்கம்
காந்திஜி நூற்றாண்டு விழா
கல்விச் சீரமைப்பு மாநாடுகள்
அறிவியல் கண்காட்சி
குழந்தைகள் விழா
ஆசிரியர் விழா
கல்விக் கருத்தரங்குகள்
பயிற்சி முகாம்கள்

போன்ற அனைத்துப் பணிகளைக் கலைமகள் கல்விநிலையம் மேற்கொண்டு செய்தபோது பணியாற்ற தொகுப்பாசிரியர் செல்வார். அப்போது கூடப் பேச்சு வரலாறு, கல்வெட்டு, தொல்பொருள் தொடர்பாகத்தான் இருக்கும். ஆம்!

இன்றைக்கும் அந்த நினைவுகள் கல் மேல் எழுத்துப் போல நீங்காமல் நிற்கிறது தொடர்பு கொண்டவர்கள் அனைவருக்கும்!

ஈரோடு நகரில் காமராஜ ரோட்டில் வீடுகட்டத் தொடங்கும் போது மண்ணுக்குள் அழகான முருகப்பெருமானின் கல் சிற்பம் ஒன்று கிடைத்தது.

கூட்டுறவு அர்பன் பாங்கின் அருகில் வீட்டின் முன் சாக்கடையில் ஒரு சோழர்காலக் கல்வெட்டுத் துண்டு கிடைத்தது.

கொல்லம்பாளையத்தில் கெஞ்சியாங்காடு, கெங்காடு ஆகியவற்றின் அருகேயுள்ள இடத்தில் வேலிக்குள் சேர மன்னன் கோரவி கோதை கல்வெட்டு ஒன்று கிடைத்தது.

கவனிப்பாரற்றுக் கிடந்த இவைகளைப் பற்றிக் கூறியவுடன் கலைமகள் ஐயா அவர்களும் தலைமையாசிரியை அவர்களும் பாதுகாப்பாகக் கலைமகளில் கொண்டு வந்து வைக்குமாறு கூறினர்.

கலைமகள் குழந்தைப் பள்ளியில் அவை பத்திரமாகக் கொண்டு வந்து வைக்கப்பட்டன.

ஒரு முறை ஈரோடு நகரில் தமிழக அரசின் தொல் பொருள்துறை இயக்குநர் டாக்டர். ஆர். நாகசாமி அவர்கள் தமிழகத் தொல்பொருள் துறை முயற்சிகள் குறித்து ஒரு கூட்டத்தில் பேசினார்கள். அக்கூட்டத்திற்கு ஐயா எஸ். மீனாட்சி சுந்தரம் அவர்கள்தான் தலைமை தாங்கினார்கள்.

சிறப்பு வாய்ந்த இம்மூன்று கலைப்பொருட்களும் குழந்தைப்பள்ளியில் இருக்கும் போதே பல அறிஞர்கள் அதனை வந்து பார்த்தனர்.

அதே குழந்தைகள் பள்ளியில் சொல்லிவைத்தாற்போல் ஒரு அற்புதம் நடந்தது. அது இதுதான்!

குடி தண்ணீர்க் குழாய் பதிக்கக் குழி தோண்டும்போது 13 - 4- 1972 அன்று—தமிழ் வருடப்பிறப்பு. அன்று தொல் பொருள் கலைக்கூடத்திற்குப் புதிய பொருட்கள்—ஆயின் பழமைக்கும் பழம்பொருட்கள் பல கிடைத்தன.

4 அடி உயரமும் 9 அடி சுற்றளவுமுள்ள மிகப் பெரிய முது மக்கள் தாழி அங்கு கிடைத்தது. அதன் உள்ளே கணவனும் மனைவியும் என்று கருதத்தக்க இரண்டுஎலும்புக் கூடுகள் கிடைத்தன. அதனைச்சுற்றிலும் அனேக மட்பாண்டங்கள் பல்வேறு வடிவங்களுடன் கிடைத்தன.

நாளிதழ்கள் எல்லாம் செய்தி வெளியிட்டன. பல்லாயிரக் கணக்கான மக்கள் அப்பழம் பொருட்களைப் பார்த்து மகிழ்ந்தனர். இன்றும் அத்தாழியும் மண்பாண்டகளும் பாதுகாப்பாக வைக்கப்பட்டுள்ளன.

கண்ணின் மணியெனக் கலைமகளை உருவாக்கிக் காத்து வளர்த்த ஐயா அவர்களின் மறைவு (14-5-1973) ஒரு சில ஆண்டுகள் முயற்சியைத் தேங்கச் செய்தது.

1975 ஆம் ஆண்டு சனவரி பிறந்தது. விடுமுறையில் பல இடங்களுக்குச் சென்று தொல்பொருள் தேடும் முயற்சியில் ஈடுபட்டோம். கலைமகளுக்கு அவைகளைக் கொண்டு வரும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது.

ஒரு நாள், சிவகிரி, பழமங்கலத்திற்கு லாரியுடன் 25 மாணவர்களையும், கலைமகள் பணியாளர்களையும் மட்டும் அழைத்துக் கொண்டு சென்றோம். போகும் இடங்களில் ஓட்டல்கள் உண்டா? என்று கலைமகள் தலைமையாசிரியை செல்வி. எம். முத்தையா அவர்கள் கேட்டார்கள். வசதியான ஓட்டல்கள் இல்லை என்று தயங்கிக் கொண்டே கூறினோம்.

பல பாத்திரங்களில் அறுசுவை உண்டியும், தின்பண்டங்களையும் லாரியில் வைத்து அனுப்பினார்கள். பெரும்பாலும் மாணவர்களே இருந்ததால் நல்ல சாப்பாட்டைத் தவிர அன்று எந்த வேலையையுமே எங்களால் செய்ய முடியவில்லை.

அதுமுதல் எங்கள் வழக்கத்தை மாற்றிக் கொண்டோம். கருங்கல்பாளையம் எம். முத்துசாமி பி. ஏ., கஸ்பா பேட்டை பி. வேலுசாமி பி.எஸ்சி, ஆகியோர் வழியாகப் பல ஆட்களை அழைத்துக் கொண்டு பவானி வட்டம், ஈரோடு வட்டம், கோபி வட்டம் ஆகிய இடங்களுக்குச் சென்றோம். ஏற்கனவே பல இடங்களுக்கும் ஐயாவுடனும் தலைமையாசிரியையுடனும் நாங்கள் சென்றிருந்ததால் நல்ல வரவேற்பும், ஒத்துழைப்பும் இருந்தது. மிகப் பெரிய பணிகளை எளிமையாகச் செய்ய முடிந்தது. மாதந்தோறும் ஒரு சில பொருட்கள் வந்து கொண்டே இருந்தன.

தொல்பொருள் கலைக்கூடம் அமைக்கும் முயற்சியில் எவ்வளவு ஆர்வத்தைத் தலைமையாசிரியை அவர்கள் காட்டினார்கள் என்பதற்கு மலர் 6- இதழ் 19 கலங்கரை விளக்கத்தில் அவர்கள் எழுதிய கடிதமே சான்று. அதை அப்படியே கீழே காண்க.

அன்புடையீர்!

கலைமகளில் புதியதொரு முயற்சியை மேற்கொண்டுள்ளோம். கலைமகள் தொல்பொருள் ஆய்வுக் கூடம் வெகு விரைவில் உருவாகிக் கொண்டு வருகிறது.

மாணவர்களுக்கு வரலாற்று ஆராய்ச்சியில் ஆர்வமூட்டும் வகையில் தொடங்கப்பட்டது, இச்சிறிய ஆய்வுக் கூடம். பழங்

கால நாகரிகத்தைப் பறைசாற்றும் மண் பாத்திரங்கள், அலங்காரக் குவளைகள், அதியமான் கோட்டைச் செங்கல்கள், ஓலைச்சுவடிகள், பற்பல நாணயங்கள், முதுமக்கள் தாழி, நடுகற்கள், சிற்பங்கள், கல்வெட்டுக்கள் இன்னும் எத்தனை எத்தனையோ வியத்தகு விசேடங்கள். இவைகளின் முக்கியத்துவம் என்ன?

பழங்கால நாகரிகத்தைக் குறித்த ஆராய்ச்சி இளந்தலை முறையினரின் ஆர்வத்தைத் தூண்டி அவர்களது ஆராய்ச்சித் திறனை அதிகரிக்கச் செய்கிறது. முற்கால மக்களின் சமயங்கள், இறைவழிபாடு, அவர்களது சிற்பத்திறன் எழுத்துக்கள் இவைகள் இத்தொல்பொருள் ஆராய்ச்சி மூலம் வெளியாகின்றன,

எமது கலைமகள் தொல்பொருள் கலைக்கூடத்தை அமைப்பதில் பெருமளவில் உதவியவர் தமிழாசிரியர் திரு. செ. இராசு. அவர்தம் கட்டுரை இவ்விதழில் வெளியிடப்பட்டுள்ளது. அன்னாருக்குக் கலைமகள் சார்பில் எனது நன்றி. அரிய தொல்பொருள்கள் அல்லது பழங்காலத்து நாணயங்கள் வைத்திருப்போர் எமது கலைக் கூடத்திற்குத் தந்துதவுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

செல்வி. M. முத்தையா

நிர்வாகி & தலைமையாசிரியர்

இறுதியில் கேட்டுக் கொண்டபடி சில பெற்றோர்களும் மாணவிகளும் சில பொருட்களைக் கொண்டு வந்து கொடுத்துள்ளனர்.

மேற்கண்ட கலங்கரை விளக்கத்தில் சுமார் 3 பக்க அளவில் தொகுப்பாசரியர் கட்டுரை ஒன்றும் "கலைமகளில் ஒரு கலைக்கூடம்" என்ற தலைப்பில் வெளியாயிற்று. அதன் ஒரு பகுதியைக் காணலாம்.

> 'ஆய கலைகள் அறுபத்து நான்கினுக்கும் அன்னை கலைமகள். அதுபோல் கலைமகள் கல்வி நிலையம். கல்வியின் எல்லாப்பகுதிகட்கும் இடமளிக்கிறது. ஆம். கலைமகள் கல்விச் சுரங்கத்தில் இந்தியாவில் எப்பள்ளியிலுமே அமையாத "தொல் பொருள் கலைக்கூடம்" உருவாகி வருகிறது.
>
> கலைமகள் நிறுவுநர் 'ஐயா' அவர்கள், வரலாற்றிலும், தொல் பொருள்களிலும் ஆர்வம் மிகுந்தவர்கள். என்னுடைய வரலாற்றுப் பணிகட்கு ஊக்கமூட்டி வளர்த்து என்னை இப்பணியில் ஆழமான ஈடுபாடு கொள்ளச் செய்தவர் ஐயா அவர்கள் தான். கலைமகள் அன்னையார் செல்வி. முத்தையா அவர்கள் தலைமையாசிரியை ஆகக் கலைமகளுக்கு வராமலிருந்தால் ஏதாவது ஒரு பல்கலைக் கழகத்தில் வரலாற்றுத்துறைத் தலைவியாகவோ - ஆய்வாளராகவோ அல்லது ஒரு மியூசியத்

தின் காப்பாளராகவே உறுதியாக ஆகி யிருப்பார்கள். அந்த அளவுக்கு வரலாறு, கல்வெட்டு, சிலை, சிற்பங்களில் மிகுந்த ஆர்வமும் ஈடுபாடும் உடையவர்கள். இவர்கள் இருவரும் கல்லும் முள்ளும், காடும் மேடும் அலைந்து கலைச் செல்வங் களைக் காண என்னை அழைத்துச் சென்றதை நினைத்தால் -கொங்கு நாட்டுக் கலைச் செல்வங்கள் செய்த புண்ணியம் என்றுதான் நாம் எண்ணவேண்டும்.

## ஐயா தொடங்கிய அரும் முயற்சி

வரலாற்றுச் சிறப்பும் தொன்மையும் மிக்க பல்லவர் கால முருகன் சிலை ஒன்று ஈரோடு நகரில் கிடைத்தது. தென் இந்தியாவெங்கும் தேடினாலும் அம்மாதிரி அபூர்வமான சிலையைக் காணமுடியாது என்று தொல்பொருள் அறிஞர் கள் கூறுகின்றனர். அச்சிலையின் பெருமையறிந்து ஐயா அவர்கள் கலைமகள் குழந்தைப்பள்ளியில் இருக்கட்டும் என்று கூறினார்கள். அதைத் தொடர்ந்து கி. பி. 10 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பிற்காலச் சேரமன்னன் கோரவி கோதை காலத்தில் ஈரோட்டில் வெட்டப் பட்ட "தாழி ஏரி" பற்றிய அபூர்வமான கல்வெட்டொன்று கொல்லம் பாளையத் தில் கிடைத்தது. அதனையும் கலைமகளில் கொண்டு வந்து சேர்த்தோம். பின் சோழ அரசியல் தலைவன் பெயர் பொறித்த துண்டுக்கல் ஒன்று காலிங்கராயன் கால்வாய் அருகே கிடைத்தது. பின்னர் என்னுடைய சோர்வினால் முயற்சி நடைபெறாமலிருந்தது.

## அன்னையின் தூண்டுதலால் அரும்பொருள் கலைக்கூடம்

ஐயா அவர்கள் மறைவிற்குப் பின்னர் அவர்கள் விரும்பிய வண்ணம் கலைக்கூடம் அமைய வேண்டும் என விரும்பி எங்களையெல்லாம் தூண்டி ஏன் துரத்தி பெரும் பொருட் செலவில் கலைகளைக் காக்கும் பொறுப்பை அன்னையார் அவர்கள் செய்து வருகிறார்கள். அவர்கள் அல்லும் பகலும் கலைக்கூட வளர்ச்சியையே சிந்தித்து வருகிறார்கள்.

## காணற்கரிய கலைக்கூடம்

ஒரு முழுமையான தொல்பொருள் கலைக்கூடத்திற்குரிய அத்துணைக் கலைப் பொருட்களும் ஒரு சேர உள்ள இதனைக் கொங்கு நாட்டின் சிற்பக்கலை, கல்வெட்டுக் களஞ்சியம் எனலாம். வரலாற்றுக் கலையின் பல்வேறு கூறு பாடுகள் ஒருங்கே திரண்டிருப்பதை ஆய்வாளர் பலர் கண்டு மகிழ்கின்றனர்.

இன்று சேர்ந்துள்ள கலைச்செல்வங்கள் போல இன்னும் பல வந்து சேரவிருக்கின்றன. இப்பொழுதே கோவை, சென்னை, மைசூர் போன்ற இடங்களிலிருந்து வரும் ஆய் வாளர்கள் கலைமகள் கலைக்கூடத்தைப் பார்வையிட்டுப் பாராட்டுகின்றனர். கல்வெட்டுக்களைப் படி எடுக் கின்றனர்.

இம்மாபெரும் கலைக் கூடத்தினை உருவாக்கும் முயற்சிக்குத் தலைமையாசிரியை கலைமகள் அன்னை செல்வி முத்தையா அவர்களின் ஆலோசனையும் தூண்டு தலும் உதவியுமே முழுமைக் காரணமாகும். எங்கிருந்தாலும் கலைச் செல்வத்தைச் சென்று, கண்டு, அதனைக் கலை

மகளுக்குக் கொண்டுவர அவர்கள் செய்யும் ஏற்பாடு என் போன்ற ஆய்வாளர்களுக்குத் தூண்டு கோலாய் அமைகிறது. விரைவில் இன்னும் பல கலைச் செல்வங்களைப் பெற்றுக் கலைமகள் கலைக்கூடம் இந்தியாவின் பெரிய கலைக் கூடங்களில் ஒன்றாகத் திகழுமாக! பள்ளி மாணவ மாணவிகள் கலைக்கூடம் கண்டு கலையறிவு பெற்றுத் திகழுவார்களாக!

இக்கலைக்கூடத்தின் திறப்புவிழா 9-4-1978 அன்று மிகச் சிறப்பாக நடைபெற்றது. தமிழக ஆளுநர் மேதகு பிரபுதாஸ் பட்வாரி, தமிழகக் கல்வியமைச்சர் மாண்பு மிகு. செ. அரங்கநாயகம் எம். ஏ., இன்றைய போக்குவரத்து அமைச்சர் மாண்பு மிகு. சு. முத்துசாமி எம். ஏ., ஆகியோர் கலந்து கொண்டு சிறப்பித்தனர். கலைக்கூடத்தை அன்றைய கோவை மாவட்ட ஆட்சித் தலைவர் திரு மிகு. கே. எச். மொஹினுதீன் அவர்கள் திறந்து வைத்தார்கள். தொகுப்பாசிரியர் பணமுடிப்பு அளித்துப் பாராட்டப்பட்டார். 18-9-1979 அன்று கலைக்களஞ்சிய மறுபதிப்புத் தொடக்க விழா கலைமகள் கல்வி நிலையத்தில் நடைபெற்ற போது வருகை புரிந்த தமிழக முதல்வர் மாண்பு மிகு. எம். ஜி. இராமச்சந்திரன் அவர்களும் கலைக்கூடம் கண்டு மகிழ்ந்தார்கள்.

பாண்டிச்சேரியில் உள்ள இந்தியவியல் கழகத்தார் பிரெஞ்சு மொழியில் எழுதி வெளியிட்டு உலகம் முழுவதும் பரப்பியுள்ள 'முருகன்' என்னும் நூலில் கலைமகள் தொல்பொருள் கலைக்கூட முருகன் சிற்பம் இடம் பெற்றுள்ளது. 'இந்து' நாளிதழ் கூட அச்சிற்பத்தை வெளியிட்டது.

தமிழகத்தின் தலைசிறந்த நாளிதழ், வார இதழ்களில் கலைமகள் தொல்பொருட் கலைக்கூடம் பற்றிக் குறிப்பிட்டுப் பாராட்டப் பட்டுள்ளது.

இந்தியக் கல்வெட்டிலாகாவின் முன்னாள் தலைவர் திரு. பி. ஆர். சீனிவாசன், அத்துறையைச் சார்ந்த டாக்டர் சி. ஆர். சீனிவாசன், டாக்டர் எம். டி. சம்பத் ஆகியோர் கலைமகளுக்கே வந்து கல்வெட்டுக்களைப் படி எடுத்திருக்கின்றனர். ஏனெனில் அவை படி எடுக்காத - புதிய- இன்றியமையாத கல்வெட்டுக்கள். கலைமகள் கல்விநிலையத்தின் பெயரிலேயே அவை வெளியிடப்பட்டுள்ளன.

சென்ற மார்ச்சு மாதம் குஜராத் மாநிலம் ஆமதாபாத்தில் உள்ள குஜராத் வித்யாபீடத்தில் அகில இந்தியக் கல்வெட்டாய்வாளர் கழகத்தின் ஆறாவது கருத்தரங்கு நடைபெற்றது. அக்கருத்தரங்கில் 10-3-80 அன்று மாலை சென்னைப் பல்கலைக் கழகத்தின் பழங்கால வரலாறு, தொல்பொருள் துறைப் பேராசிரியர் டாக்டர் கே.வி. இராமன் தலைமையில் "ஈரோடு கலைமகள் தொல்பொருள் கலைக் கூடத்தில் உள்ள சில அரிய கல்வெட்டுக்கள்" என்னும் தலைப்பில் இதன் தொகுப்பாசிரியர் ஆராய்ச்சிக் கட்டுரை ஒன்றை வாசித்தார். தேவையான விளக்கப் படங்களும் காட்டப் பட்டன.

இந்தியாவெங்கிலுமிருந்து வந்த சுமார் 150 பேர் கொண்ட அக்கூட்டத்தில் இக்கட்டுரை பெரும் பாராட்டு தலைப் பெற்றது. பலர் பல விளக்கம் கேட்டனர். இப்படியும் ஒரு உயர்நிலைப்பள்ளி - அதுவும் பெண்கள் உயர்நிலைப் பள்ளி வரலாற்றுக்குப் பணிபுரிகிறதா? என்று வியந்தனர்.

1980 ஜுன் 13, 14, 15 ஆகிய நாட்களில் ஈரோடு ஸ்ரீவாசவி கல்லூரியின் வரலாற்றுத்துறை "கொங்கு நாட்டு வரலாற்றுக் கருத்தரங்கு" ஒன்றினை நடத்தினர். அதற்கென அமைக்கப்பட்ட வரவேற்புக் குழுவில் கலைமகள் தலைமையாசிரியை செல்வி எம். முத்தையா அவர்களும், இதன்

தொகுப்பாசிரியர் புலவர் செ. இராசுவும் இருந்து சிறப்பாகப் பணி புரிந்தனர்.

15-6-80 அன்று அக்கருத்தரங்குக்கு வந்திருந்த வெளியூர்ப் பேராளர்கள் அனைவரும் கலைமகளுக்கு வருகை புரிந்து கலைக்கூடம் கண்டு மகிழ்ந்தனர். சிலர் மீண்டும் கலைமகளுக்கு வந்து ஆய்வுகள் செய்ய இருப்பதாகவும் கூறினர்.

அவர்களில் முககியமானவர்கள் சிலர்:

| | |
|---|---|
| திரு. கே. ஜி. கிருஷ்ணன் | - தலைவர், இந்தியக் கல் வெட்டுத் துறை, மைசூர் |
| டாக்டர் கே. வி. ராமன் | - தலைவர், பழங்கால வரலாறு தொல் பொருள் துறை, பல்கலைக் கழகம் சென்னை |
| திரு. ஹரி நாராயணா | - இயக்குநர், அரும் பொருட் காட்சியகம். சென்னை |
| டாக்டர் கே. வி. ரமேஷ் | - கண்காணிப்பாளர், இந்தியக் கல்வெட்டுத் துறை, மைசூர் |
| டாக்டர் எம். என். கட்டி | - இந்தியக் கல்வெட்டுத் துறை, மைசூர் |
| டாக்டர் எம். டி. சம்பத் | - இந்தியக் கல்வெட்டுத் துறை, மைசூர். |
| டாக்டர் எஸ். மாணிக்கம் | - பேராசிரியர், வரலாற்றுத் துறை, காமராசர் பல்கலைக் கழகம், மதுரை |

| | |
|---|---|
| திரு. லட்சுமி நாராயணன் | - காப்பாட்சியர், அரும் பொருட்காட்சியகம் சேலம் |
| டாக்டர் பி. ராஜண்ணன் | - கொங்கு ஆய்வகம், சேலம் |
| திரு. வி. என். சீனிவாச தேசிகன் | – காப்பாட்சியர், அரும் பொருட்காட்சியகம், சென்னை |

இன்னும் பெங்களூர், வாணியம்பாடி, சென்னை, இராசிபுரம், கோபி, கோவை, திருப்பூர், பொள்ளாச்சி, போளுவாம்பட்டி, பேரூர், கோவில்பட்டி, உடுமலை, கொடுமுடி, கரூர், பழனி, சூகலூர், நாமகிரிப்பேட்டை, தென்காசி ஆகிய இடங்களிலிருந்து வந்த ஆய்வாளர்கள் சுமார் 45பேர் இத்தொல் பொருள் கலைக் கூடம் கண்டு பாராட்டினர்.

அவர்களுக்குக் கலைமகள் கல்வி நிலையத்தில் சிறப்பான வரவேற்பும் விருந்தும் கொடுக்கப் பட்டது.

இத்தகு சீரும் சிறப்புமிக்க - அறிஞர்கள் பாராட்டும், கலைக்கூடத்தில் உள்ள கவின்மிகு கலைச்செல்வங்கள் பற்றி அறிய உங்களுக்கும் ஆர்வம் இருக்கிறதா? வாருங்கள். கலைக்கூடத்தின் உள் நுழைந்து கலைமகள் கல்வி நிலையம் தொகுத்துள்ள அரிய பொருட்களைக் காண்போம்.

கலைச் செல்வங்கள் பற்றி அறியுமுன் அவை தோன்றிய, வளர்ந்த -வாழ்ந்த இடத்தின் வரலாற்றைத் தெரிந்து கொள்வது நல்லது என்பதற்காகப் பெரியார் மாவட்ட வரலாற்றுச் செய்தி சுருக்கமாகக் கூறப்படுகிறது.

# [2] சங்கம் புகழும் கொங்கு

தமிழ்நாட்டில் சேர சோழ பாண்டிய நாடுகளைப் போன்றே கொங்கு நாடும் மிகப்பழமையான ஒரு பிரிவாகும். சங்க இலக்கியங்கள் 'கொங்கு' பற்றியும் 'கொங்கர்' பற்றியும் பல குறிப்புக்களைத் தருகின்றன.

மேற்கே வெள்ளியங்கிரி மலை, தெற்கே பழனி, கிழக்கே குழித்தலை, வடக்கே பெரும்பாலை இந்த நான்கு எல்லைகட்குட்பட்டது கொங்கு நாடு. இந்தக் கொங்கு நாடு மேல் கொங்கு, தென்கொங்கு, வடகொங்கு, மழகொங்கம் என்ற நான்கு பெரும்பகுதிகளாகவும் 24 சிறு நாடுகளாகவும் பிரிக்கப்பட்டிருந்தது.

# [3] பெரியார் மாவட்டம்

வடகொங்கு நாட்டையும், தென் கொங்கு நாட்டையும் சார்ந்த காங்கேய நாடு, மேல்கரைப் பூந்துறைநாடு, வடகரை நாடு, தென்கரைநாடு, காஞ்சிக் கூவல் நாடு, மேல் கரை அரைய நாடு, ஒடுவங்கநாடு, குறுப்பு நாடு, மண நாடு ஆகிய பழைய ஒன்பது நாடுகள் அடங்கியதே நமது பெரியார் மாவட்டம் ஆகும். ஏறத்தாழக் கொங்கு நாட்டின் நான்கில் ஒருபங்கு பரப்பளவைப் பெரியார்மாவட்டம் கொண்டுள்ளது.

## சங்க காலம்

பெரியார் மாவட்டத்தில் உள்ள கொங்கு, அரையம், கொடுமுடி, சென்னிமலை, கொடுமணம், பூந்துறை, பெருந்துறை, நன்றா, பர்கூர், நாகம் போன்ற ஊர்கள் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன. சங்கப் புலவர் பெருந்தலைச் சாத்தனார் பெருந்தலையூரையும், பொன்முடியார் பெருந்துறை அருகில் உள்ள பொம்முடி என்ற ஊரையும் சார்ந்தவர்கள்.

சங்க காலத்தில் ரோமானியர் பெரியார் மாவட்டப் பகுதியுடன் தொடர்பு கொண்டு வாணிகம் செய்தனர். காங்கயம் அருகே படியூரில் பெரில்ஸ் என்ற கடல் நிற வைரக்

கற்கள் கிடைத்தன. பிளைனி இதுபற்றிக் குறிக்கின்றார். அவைகளை ரோமானியப் பெண்கள் மிகவும் விரும்பினர்.

'ஆகெழு கொங்கு' என்று பெரியார் மாவட்டப் பகுதியைச் சங்க இலக்கியம் புகழுகிறது. சங்க காலத்தில் பல வேளிர்கள் சிற்றரசர்களாக இங்கு வாழ்ந்தனர். கிழக்குக் கடற்கரையையும், மேற்குக் கடற்கரையையும், இணைக்கும் பெருஞ்சாலைகள் பல பெரியார் மாவட்டப்பகுதி வழியாகவே சென்றன.

வானி(பவானி) காஞ்சி (நொய்யல்) ஆன்பொருநை (அமராவதி) ஆறுகள் காவிரியைப் போலவே சங்க இலக்கிய புகழ் உடையன.

## கொங்கதேச ராசாக்கள்

### (இரட்டர், கங்கர்)

சங்க காலத்தை அடுத்து இரட்டர், கங்கர் எனப்படும் இரண்டு பிரிவினர் தாராபுரம் அருகே உள்ள கொங்கு (கொங்கூர்) என்ற ஊரைத் தலைநகராகக் கொண்டு அரசாண்டனர். இரட்டர் குலத்தில் வீரராயன் தொடங்கி ஏழு அரசர்களும் கங்கர் மரபில் கொங்கணிவர்மன் தொடங்கி இருபது அரசர்களும் அரசாண்டனர்.

நாடுகளைப் பிரித்துத் தல சுய ஆட்சி முறைக்கு வித்திட்டவர்கள் இவர்களே. கிராம அதிகாரிகளையும் இவர்கள் நியமித்தனர். பிற்காலத்தில் பாளையக்காரர்கள் தோன்றுவதற்கு இம்முறை காரணமாக இருந்தது.

ஆலயங்கள் பலவற்றைக் கட்டி நன்கொடைகளும் அளித்தனர். சமண சமயம் இம்மாவட்டத்திற்குள் புகுந்தது இவர்கள் காலத்தில்தான். வேளாண்மையும், கைத்

தொழிலும் இவர்கள் காலத்தில் பெருகின. புலவர்களை ஆதரித்தனர்.

## சேரர் ஆட்சி

சங்க காலத்தின் இறுதியிலேயே சேரர்கள் இப்பகுதியில் ஆதிக்கம் செலுத்த முற்பட்டனர். செங்குட்டுவன் சோழ பாண்டியரோடு நொய்யல் ஆற்றங்கரையில் உள்ள செங்களம் என்ற இடத்தில் போர் செய்தான். இதனைச் சிலப்பதிகாரம் கூறுகிறது.

அதியமான் சேரர் மரபினன் என்று புகழப்பட்டான். சேரர்கள் கரூர் உட்படப் பல இடங்களில் வஞ்சி என்ற பெயரில் ஊர்களை ஏற்படுத்தினர்.

சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குக் கோயில் கட்டினான். அந்த விழாவிற்குக் கொங்கு நாட்டு மன்னன் இளங்கோசன் என்பவன் சென்றிருந்தான்.

கி.பி. 8, 9, 10 ஆம் நூற்றாண்டில் இரவி கோதை கோக்கண்டன், வீர நாராயணன் போன்ற சேர அரசர்கள் கொங்கு நாட்டின் மீதுபடை எடுத்தனர். ஈரோடு, பொன்னிவாடி, பிரமியம் போன்ற இடங்களில் இவர்கள் கல்வெட்டுக்கள் உள்ளன. ஈரோடு அருகே அனுமன்பள்ளியில் சேரர் செப்பேடு ஒன்று கிடைத்துள்ளது.

இதையெல்லாம் கருத்தில் கொண்டே பிற்காலப்புலவர் அருணகிரியார் 'சேரர் கொங்கு' என்று பாடினார்.

## சோழர் ஆட்சி

சங்க காலத்திலேயே பெரியார் மாவட்டச் செங்களம் என்ற போர்க்களத்தில் சோழர் கலந்து கொண்டதை முன்பே கண்டோம். கரிகாலன் கொங்கு நாட்டில் சில காலம் வாழ்ந்ததாக வரலாறு கூறுகிறது.

பிற்காலச் சோழர்களில் ஆதித்த சோழன் கொங்கு நாட்டை வென்றான். அவன் கொழுமம் கோயிலுக்குப் பொன் வேய்ந்தான். முதலாம் பராந்தக சோழன் கல்வெட்டு ஈரோட்டில் உள்ளது. இரோசேந்திர சோழன், இராசராசன், குலோத்துங்கன் போன்றவர்கள் இப்பகுதியை ஆண்டனர். கொங்கு நாட்டுக்குச் சோழர்கள் அதிராசராசமண்டலம், வீர சோழ மண்டலம், சோழ கேரள மண்டலம் என்று பல் வேறு காலங்களில் பெயரிட்டு ஆண்டனர். சோழ நாட்டை ஆறு மண்டலங்களாகப் பிரித்திருந்தனர். அவற்றில் கொங்கு நாடும் ஒன்று. ஆலயத் திருப்பணிகள் பலவற்றைச் சோழர் மேற்கொண்டனர். சோழன் பூர்வ பட்டையம் என்ற வரலாற்று நூல் இதனை மிக விரிவாக விளக்குகிறது.

இவர்கள் காலத்தில் கி. பி. 1004 முதல் கொங்குச் சோழர் என்ற தனிப் பிரிவினர் இங்கு சிற்றரசர்களாக விளங்கினர். அவர்கள் கண்டராதித்த சோழன், உத்தம சோழன் வழியில் வந்தவர்கள். கொங்குச் சோழர் ஆளுகைக்கு உட்பட்ட பகுதியில் தஞ்சைப்பேரரசுச்சோழர்களின் கல்வெட்டுக்கள் மிகமிக அரிதாகவே கிடைக்கின்றன. கொங்கூருக்கு அருகில் பராந்தகபுரம் என்று பெயரிட்டு ஒரு நகரை ஏற்படுத்தினர். பின்னர் அதற்கு இராசராசபுரம் என்று பெயரிட்டனர். அவ்வூர் விசயநகர அரசர்கள் காலத்தில் இராராபுரம் என்றாகிப் பின்னர் தாராபுரம் ஆகிவிட்டது.

சோழர்கள் ஆட்சிக் காலத்தைக் கொங்கு நாட்டின் பொற்காலம் என்று கூறலாம். மக்கள் வளமுடன் வாழ்ந்தனர். பகைவர் அக்காலத்தில் இங்கு புகவில்லை. ஆலயத் திருப்பணிகள் பல நடைபெற்றன. வாணிகம் சிறப்பாக நடைபெறப் பல்வேறு சாலைகள் அமைக்கப்பட்டன.

அக்காலத்தில் பெரியார் மாவட்டப் பகுதியில் தமிழ் நன்கு வளர்ந்தது. விசயமங்கலத்தில் ஒரு சமணத் தமிழ்ச்

சங்கம் இருந்தது. கொங்கு வேளிர் என்பவர் பெருங்கதையை எழுதினார். சீனாபுரம் என்ற ஊரில் வாழ்ந்த பவணந்தி நன்னூல் என்ற நூலை எழுதினார். சிலப்பதிகாரத்திற்கு விசயமங்கலம் அருகில் இருந்த நிரம்பை என்ற ஊரைச் சேர்ந்த அடியார்க்கு நல்லார் உரை எழுதினார். பிற்காலத்தில் கொங்கு மண்டல சதகம் பாடிய கார்மேகக் கவிஞரும் விசயமங்கலத்தினர்தான்.

## பாண்டியர் ஆட்சி

பாண்டியர்கள் கொங்கு நாட்டை வென்றதாக வேள்விக்குடிச்செப்பேடு கூறுகிறது. மழகொங்கினை வென்றதாகவும், காவிரியைக் கடந்து போர் செய்ததாகவும், கொடுமுடியில் சிவபெருமானை வணங்தகியாகவும் பாண்டியர் செப்பேடு கூறுகிறது. கொடுமுடிக்கே திருப்பாண்டிக் கொடுமுடி என்று பெயர். கொடுமுடி மூவர் தேவாரம் பெற்ற தலம்.

நொய்யல் நதிக் கரையில் ஆனூரில் பாண்டியர் போர் செய்திருக்கின்றனர். பிற்காலப் பாண்டியருள் சுந்தர பாண்டியன், கொங்கு நாட்டை வென்றான். கொங்குப் பாண்டியர் என்ற பெயரில் நான்கு அரசர்கள் இங்கு ஆட்சி புரிந்தனர். குலசேகர பாண்டியன், வீரபாண்டியன், சுந்தர பாண்டியன், விக்கிரம பாண்டியன் ஆகியோர் ஆவர். கொங்குச் சோழர்கள் இறுதிக் காலத்தில் பாண்டியர்தம் அரசியல் தலைவர்கள் ஆயினர்.

பல குளங்களையும், கால்வாய்களையும் பாண்டியர் வெட்டினர். வீரபாண்டியன் தளபதி வெள்ளோடு காலிங்க ராயன் ஒரு கால்வாய் வெட்டி வைத்தான். அது இன்றும் அவன் பெயரோடு விளங்குகிறது.

## ஒய்சளர் ஆட்சி

ஹளேபீடு, துவார சமுத்திரம் பகுதியில் ஆட்சி செய்து கொண்டிருந்த ஒய்சளர் கொங்கு நாட்டைக் கைப்பற்றினர் வீரவல்லாளன் கல்வெட்டுக்கள் பல இங்கு கிடைக்கின்றன.

## விசய நகர ஆட்சி

இந்து சமயத்தின் இரு பிரிவுகளான சைவம். வைணவம் இரண்டையும் வளர்க்கும் எண்ணத்துடன் விசயநகர அரசு தோற்றுவிக்கப்பட்டது. அவ்வமிசத்தின் இரண்டாம் மன்னர் கம்பண்ண உடையார் காலம் முதல் கொங்குநாடு விசயநகர ஆட்சிக்கு உட்பட்டது.

சங்கம. சாளுவ, துளுவ ஆறவீடு என்ற நான்கு வம்ச விசயநகர அரசர்களும் இப்பகுதியை ஆண்டனர். போரினால் அழிந்த கோயில்களைக் கட்டினர். பலகொடைகளைக் கோயிலுக்கு அளித்தனர்.

கிருஷ்ண தேவராயன், சதாசிவராயன், அச்சுதராயன் கல்வெட்டுக்கள் இங்கு மிகுதியாக கிடைக்கின்றன. அவர்கள் பல கோட்டைகளைக் கட்டினர். ஈரோடு, அருகே சத்தியமங்கலம் [கஸ்பா பேட்டை] என்ற ஊரில் கை, கால் அற்ற முடவர்களுக்கு ஒரு பாதுகாப்பு நிலையம் ஏற்பட்டது. பாளையக்காரர் ஆட்சிமுறை இந்தக்காலத்தில்தான் ஏற்படுத்தப் பட்டது.

## உம்மத்தூர்த் தலைவர்கள் ஆட்சி

பேரரசு வலிமை குன்றும்போது குறுநிலத்தலைவர்கள் சுயேச்சை மன்னர்களாக ஆவது வழக்கம். விசயநகர மன்னன் தேவராயனுக்குப் பின் வந்த சிலர் வலிமை குறையவே உம்மத்தூர் தலைவர்கள் தனிஆட்சி செலுத்தத் தொடங்கினர்.

வீரநஞ்சராய உடையார், வீரசிக்கராயன், வீர நஞ்சன்ன உடையார் என்ற மூவர் இத்தலைவர்களாக ஆட்சி

புரிந்தனர். பெரியபாளையம், ஆரத்தொழு, தாராபுரம், கிடாரன், குன்னத்தூர், நம்பியூர் போன்ற இடங்களில் இவர்கள் ல்வெட்டுக்கள் கிடைக்கின்றன.

கோபி அருகே கொடிவேரி அணை இவர்கள் காலத்தில் கட்டப்பட்டது. கி.பி. 1509-ல் பட்டத்துக்கு வந்த கிருஷ்ண தேவராயன் உம்மத்தூர் மீது படை எடுத்துத் தன் அரசோடு அதனைச் சேர்த்துக்கொண்டான்.

## மதுரை நாயக்கர் ஆட்சி

விசயநகர அரசின் பிரதிநிதி நாகமநாய்க்கன்மகன் விசுவ நாதன் மதுரையில் முதல் நாயக்கமன்னர் ஆனார். இக் காலத்திலேயே செஞ்சி தஞ்சை வேலூர் போன்ற இடங் களிலும் நாயக்க அரசுகள் ஏற்பட்டன.

பெரியார் மாவட்டப் பகுதியில் பல கோட்டைகளை நாயக்க அரசர்கள் புதுப்பித்தனர். தாராபுரம், டணாயக்கன் கோட்டை, அந்தியூர், ஈரோடு, காங்கயம், விசயமங்கலம் போன்ற இடங்களில் கோட்டைகள் இன்றும் அழிந்த நிலையில் உள்ளன.

கோயில்களில் சிற்பச்செல்வங்கள், மண்டபங்கள் இக் காலத்தில் ஏற்பட்டன. முத்துவீரப்ப நாயக்கன் காலத்தில் ஈரோட்டில் ஒரு சத்திரம் ஏற்பட்டது. இப்போது அது வீரப் பன் சத்திரம் எனப்படுகிறது. திருமலைநாயக்கன் அவர் களில் சிறந்த அரசன். திருஞானசம்பந்தர் பாடிய பவானி கோயில் இக்காலத்தில் விரிவாக்கப்பட்டது. பல சிறு பாளையக்காரர்கள்பெயரில் எண்ணற்ற ஊர்கள் ஏற்பட்டன.

## மைசூர் ஆட்சி

மைசூரில் இருந்த விசயநகரப் பிரதிநிதிகளை அகற்றி விட்டு 'உடையார்' எனப்படும் மரபினர் மைசூர் அரசர்கள் ஆயினர். அவர்கள் சிறிது சிறிதாகக் கொங்கு நாடு முழுவ

தையும் கைப்பற்றினர். சீரங்கப் பட்டணத்தை முதலில் தலை நகராகக் கொண்டு இவர்கள் ஆட்சி புரிந்தனர். மதுரைநாயக்கர்கள் மீது படைஎடுத்தனர். கோட்டைகளைப் பலப்படுத்தினர்.

சிவகிரி, துடுப்பதி, பூந்துறை, சென்னிமலை பெரிய பாளையம் போன்ற இடங்களில் இவர்கள் கல்வெட்டுக்கள் உள்ளன. பெரியபாளையம் போன்றஊர்களில் சிறந்த கோயில்கள் உள்ளன. சுந்தரர் அவ்வூரைக் குரக்குத் தளி என்று குறிப்பிடுகிறார். இக்காலத்தில்தான் ஆங்கிலேயர், பிரெஞ்சுகாரர் போன்ற அன்னியர்கள் நம் நாட்டு நிர்வாகத்தில் தலையிட்டனர். மைசூர் உடையார்களை நீக்கிவிட்டு ஐதர்அலியும் திப்பு சுல்தானும் பதவிக்கு வந்ததும் இக்காலத்தில்தான்.

கி.பி. 1785முதல் 1792வரை நடைபெற்ற மூன்றாம் மைசூர்ப் போரிலும் 1799-ல் முடிவுக்கு வந்த நான்காம் மைசூர்ப் போரிலும் பெரியார் மாவட்டப் பகுதி பெரும் பங்கு வகித்தது.

## ஆங்கிலேயர் ஆட்சி

ஐதர்அலி தீவிர அரசியலில் ஈடுபட்டுப் பேரரசு ஒன்றை நிறுவும் எண்ணத்துடன் போரில் ஈடுபட்டான். ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியார் அதற்கு எதிர்ப்பாக இருந்தனர். ஐதருக்குப் பின் திப்புசுல்தானும் அப்போர்களைத் தொடர்ந்தான். அப்போர்களை மைசூர்ப் போர் என்று அழைத்தனர்.

ஜெனரல் மெடோஸ் என்னும் கம்பெனிப்படைத் தலைவன் திப்புவின் காலத்தில் 1790 ஆம் ஆண்டு ஆகஸ்டு 6ஆம் நாள் ஈரோட்டைக் கைப்பற்றினான். சத்தியமங்கலத்தில் வலிமை வாய்ந்த கம்பெனிபடை ஒன்று இருந்தது. செப்டம்பர் 2ஆம் நாள் மெடோஸ் கோவையில் இருக்கை

யில் 40000 படையினரோடு வந்து பவானி ஈரோட்டை திப்பு மீண்டும் கைப்பற்றினான்.

நான்காம் மைசூர் போரில் திப்பு இறுதி வீழ்ச்சி அடைந்தவுடன் பெரியார் மாவட்டப்பகுதி கம்பெனி ஆட்சிக்குள் வந்து விட்டது. முன்னரே ஸ்வார்ட்ஸ் பாதிரியார் திப்புவுக்கும் கம்பெனியினருக்கும் சமாதானம் செய்ய முயன்றார். முடியவில்லை.

ஆப்பக் கூடலில் கம்பெனிப் பொருளை விற்கச் சந்தை ஒன்று ஏற்படுத்தப்பட்டது. 1799-ல் பவானியைத் தலை நகராகக் கொண்டு வடக்கு மாவட்டமும், திண்டுக்கல்லைத் தலைநகராகக் கொண்டு தெற்கு மாவட்டமும் ஏற்பட்டது. 6-7-1799-ல் கேப்டன் மாக்ஸியாட் பவானியின் முதல் கலெக்டர் ஆனார். பின்னர் கேரோ என்பவர் நியமிக்கப்பட்டார். 1804-ல் கோவை தலைநகர் ஆக்கப்பட்டது.

ஐதர், திப்பு காலத்திலிருந்த கிராம, வட்ட ஆட்சி முறையே கம்பெனி ஆட்சி முறையிலும் பின்படுத்தப்பட்டு வந்தது. 1860 வரை ஈரோடு பகுதிக்கெல்லாம் பெருந்துறையே தலைநகராக இருந்தது. 1860ல் தாலுக்கா சீரமைப்பிலிருந்து ஈரோடு தலைநகர் ஆயிற்று.

## விடுதலைப் போராட்டத்தில் பெரியார் மாவட்டத்தின் பங்கு

விடுதலைப் போராட்ட காலத்தில் பெரியார் மாவட்டம். முன்னணியில் நின்றது. தொடக்க காலத்தில் தீரன் சின்னமலை என்பவர் அறச்சாலூர் ஓடாநிலைப் பகுதியில் படை திரட்டி மைசூர் ஆதிக்கத்தையும் கம்பெனியின் ஆதிக்கத்தையும் எதிர்த்தார்.

மகாத்மா காந்தியின் வழியில் முழு நம்பிக்கை கொண்ட அநேக சுதந்திரப் போராட்ட வீரர்களைக் கொண்டது

பெரியார் மாவட்டம். நாகபுரிக் கொடிப் போராட்டம் அன்னியத்துணி பகிஷ்காரம்,கள்ளுக்கடை மறியல், தனிநபர் சத்தியாக்கிரகம், உப்பு சத்தியாக்கிரகம் வெள்ளையனே வெளியேறு போராட்டம் ஆகிய எல்லாப் போராட்டங் களிலும் நம் மாவட்டம் பங்கு கொண்டது.

கொடிகாத்துப் புகழ்கொண்ட தியாகி திருப்பூர்க்குமரன் பெரியார் மாவட்டத்தில் சென்னிமலையில் பிறந்தார். ஈரோட்டில் சில காலம் வாழ்ந்தார். டாக்டர் எல். கே முத்து சாமி, எம். ஏ., ஈசுவரன், தங்கப்பெருமாள், ஆர். சி. கிருஷ்ணன், பெரியார் ஈ. வே. இராமசாமி போன்றவர்கள் இம்மாவட்டத்தின் மறைந்த சுதந்திரப் போராட்ட வீரர்கள்.

கலைமகள் கல்வி நிலைய நிறுவுனர் ஐயா எஸ். மீனாட்சிசுந்தரம் அவர்களும் சிறந்த சுதந்திர போராட்ட வீரர். காந்திஜீ போன்ற இந்தியத் தலைவர்களும், பாரதியார் போன்ற தமிழகத் தலைவர்களும் ஈரோட்டுப் பகுதிகளுக்கு வந்தபோது நெருங்கிப் பழகியவர். கதர் இயக்கத்திலும் தீவீர மாக ஈடுபட்டவர்.

தந்தை பெரியார் சமூகக் கொடுமை—சமுதாய ஏற்றத் தாழ்வுகள் நீங்கப்பாடுபட்டவர். வைக்கம் சத்தியாக்கிரகத் தில் புகழ் பெற்றவர். இறுதி நாளெல்லாம் பகுத்தறிவுப் பிரச்சாரத்தில் தீவிரமாக ஈடுபட்டவர். அவருடைய நினை வால் அவர் பிறந்த ஈரோட்டைத் தலைமையிடமாகக் கொண்டு 17-9-1979 முதல் பெரியார் மாவட்டம் என்ற பெயரில் கோவை மாவட்டத்தை இரண்டாகப் பிரித்து தனி மாவட்டமாக அமைத்துள்ளனர். பெரியார் மாவட்டத்தில் ஈரோடு, பவானி, கோபி, சத்தியமங்கலம், பெருந்துறை, தாராபுரம் ஆகிய ஆறு வட்டங்கள் அடங்கியுள்ளன.

பெரியார் மாவட்டத்தின் பல்வேறு சிறப்புகளுக்குள் ஒன்று கலைமகள் கல்வி நிலையத்தில் தொல்பொருள் கலைக் கூடம் ஒன்று தொடங்கப் பெற்றிருப்பது. இங்குள்ள சிற்பங் கள், சிலைகள், கல்வெட்டுக்கள், தொல்பொருள்கள் பெரும் பாலன பெரியார் மாவட்டத்தைச் சார்ந்தது. பெரியார் மாவட்ட வரலாற்றுப் பின்னணி அவற்றைப் பற்றி நன்கு அறிய இன்றியமையாதது.

# [4] நாடுகள்

| சதகம் கூறுவன: | கல்வெட்டுக்கூறுவன: |
| --- | --- |
| 1. ஆறை நாடு | பேரூர் நாடு |
| | வடபரிசார நாடு |
| பிரிவு | பிரிவு |
| கோவங்க நாடு | வெள்ளா நாடு |
| மன்னி நாடு | பூலுவ நாடு |
| கவைய நாடு | சேவூர் நாடு |
| செம்பை நாடு | திரற்றூர் நாடு |
| தணக்கு நாடு | வழையலூர் நாடு |
| பழன நாடு | நாலூர்ப்பற்று நாடு |
| | பழன நாடு |
| 2. ஒடுவங்க நாடு | ஒடுவங்க நாடு |
| பிரிவு | பிரிவு |
| டணாயகன் கோட்டை நாடு | படி நாடு அல்லது |
| படி நாடு | கங்கை கொண்ட சோழ |
| | வள நாடு |
| 3. வாரக்க நாடு | வாயிரக்க நாடு |
| 4. பொன்கலூர் நாடு | பொங்கலூர்க்கா நாடு |
| தென் பொங்கலூர் அல்லது | |
| பொன் குலுக்கி நாடு | |

| | | |
|---|---|---|
| 5. | காங்கேய நாடு | காங்கய நாடு |
| | | நற்காவேரி நாடு |
| 6. | குறும்பு நாடு | குறுப்பு நாடு |
| | | வீர சோழவள நாடு |
| 7. | காஞ்சிக்கோயில் நாடு | காஞ்சிக் கூவல் நாடு |
| 8. | வடகரை நாடு | வடகரை நாடு |
| | | நாடாழ்வார் நாடு |
| 9. | பூந்துறை நாடு | பூந்துறை நாடு |
| | மேல் கரை | மேல்கரைப் பூந்துறை நாடு |
| | கீழ் கரை | கீழ்க்கரைப் பூந்துறை நாடு |
| | **இணை நாடு** | |
| | பருத்திப்பள்ளி நாடு | பருத்திப் பள்ளி நாடு |
| | ஏழூர்நாடு | குன்றத்தூர் நாடு |
| | | நாடாழ்வர் |
| | | சேலநாடு |
| | | ஏழூர்நாடு |
| 10. | அரைய நாடு | அரயநாடு |
| | மேல்கரை | |
| | கீழ்கரை | |
| 11. | தென்கரை நாடு | தென்கரை நாடு |
| | | நரையனூர் நாடு |
| 12. | மண நாடு | வடகரை நாடு |
| | | மணத்தூர் நாடு |
| 13. | வெங்கால நாடு | வெங்காலநாடு |
| | இடைப்பிச்ச நாடு | இடைப்புழுதி நாடு |
| 14. | தட்ட நாடு | தட்டையூர் நாடு |
| 15. | கிழங்கு நாடு | கிழங்கநாடு |
| 16. | தலைய நாடு | தலையூர் நாடு |
| 17. | அண்ட நாடு | அண்ட நாடு |

| | | |
|---|---|---|
| 18. | வையாபுரி நாடு | வைகாவி நாடு |
| | | கரைவழி நாடு |
| | | ராஜராஜ வளநாடு |
| 19. | நல்லுருக்கா நாடு | நல்லுருக்கா நாடு |
| 20. | காவடிக்கா நாடு | காவடிக்கா நாடு |
| 21. | ஆனைமலை நாடு | நன்னனூர் |
| 22. | பூவாணிய நாடு | வடபூவாணிய நாடு |
| | நங்கவல்லி நாடு | கீட்பா நாடு |
| | பக்க நாடு | வஞ்சி நாடு |
| | பெரும்பாலை நாடு | |
| 23. | வாழவந்தி நாடு | |
| | தூசூர் நாடு | – |
| | விமலை நாடு | |
| 24. | இராசிபுர நாடு | இராசிபுர நாடு |
| | கொல்லி 14 நாடுகள் | |
| | சேலநாடு | |
| | சேர்வராயன் 3 நாடு | |

# [5] புகழ் மிக்க பூந்துறை

ஈரோடு மாநகர் இருக்கும் பகுதி பழங்காலக் கொங்கு நாட்டு அமைப்பில் பூந்துறை நாட்டைச் சேர்ந்தது. கொங்கு 24 நாடுகளில் பூந்துறை நாடும் ஒன்று.

கிழக்கே காவிரியாறு, தெற்கே நொய்யலாறு, (காஞ்சி) வடக்கே பவானியாறு [வானி] மேற்கே சென்னிமலை இந்த நான்கு எல்லைகட்குட்பட்டது பூந்துறை நாடு. இதனை ஒரு பழம்பாடல்

"உன்னிய தெற்கில் காஞ்சி
உயர்நதி வடக்கு வானி
பொன்னிமா நதியே! கீழ்பால்
புகன்றிடும் மேற்குத் திக்கில்
சென்னிமா மலையே யாகும்
சிறக்குமுப் பத்தி ரண்டூர்
மின்னுமேல் கரையாய்க் கொண்டு
விளங்குபூந் துறை நன்னாடு"

என்று கூறுகிறது.

இப்பூந்துறை நாட்டில் குறிக்கப்பட்ட 32 ஊர்களும் மிகத் தொன்மையானவை. இவைகளைத் தொகுத்து ஊர்த் தொகைப் பாடல் கூறுகிறது.

"பூந்துறை வெள்ளோடு நசியனூர் எழுமாதை
புகழ்சேர் பிடாரி நகரம்
பூங்கமழும் ஈங்கியூர் பெருந்துறை சாத்தனூர்
பொன்காளமங்கல மதும்
ஆய்ந்த தமிழ்கூறும் குழாநிலை கிழாம்பாடி
ஆண்மைகொள் மொடக்கு றிச்சி
அனுமநகர் பழமங்கை குலவிளக்குக் காகம்
அறச்சலூர் விளக்கேத் தியும்
வேந்தர்மகிழ் ஈஞ்சநகர் சத்தியமங் கலமதும்
மிக்கசே மூர் மங்கலம்
வீரநகர் ஈரோடு பேரோடு சித்தோடு
மிக்கான திண்டல் புதூர்
சேர்ந்துமழை பெய்திடும் இலவமலை திருவாச்சி
திகழ்பனசை ஓடா நிலை
தெல்முருங் கைத்தொழுவு முப்பத்து ரண்டூர்
சிறந்த பூந் துறைசை நாடே"

என்பது அப்பாடல்.

இந்த 32 ஊர்களுக்கும் பூந்துறை, வெள்ளோடு, நசியனூர் எழுமாத்தூர் நான்கும் தலைநகரங்கள். இவைகட்கு முறையே 10, 8, 6, 4 உறுப்பினர்களையும், இவை நான்கு நீக்கிய ஏனைய 28 ஊர்களுக்குத் தலா ஒரு உறுப்பினரையும் கொண்டு 56 உறுப்பினர்களைக் கொண்டு முன்பு திகழ்ந்தது பூந்துறை நாட்டுச் சபை.

இந்தச்சபையே இந்நாட்டு நீதி, நிருவாகம், அறச்செயல் ஆகியவைகளை நிர்வகித்து வந்தது. இத்தலசுய ஆட்சி முறை சோழநாட்டு வாரியங்களை விட மிகச் சிறந்தது; தொன்மையானது; சிறந்த அமைப்பினையும் கொண்டது கலைமகளில் உள்ள கல்வெட்டுக்கள் சில இந்த நாட்டுப் பிரிவைக் குறிக்கின்றன.



செப்புப்படிமங்கள்



பழங்கால மண்பாண்டங்கள்



பழங்கால மண்பாண்டங்கள்



புதிய கற்கால ஆயுதங்கள்



சங்கு வளையல் ஆபரணங்கள்



ஆதிச்சநல்லூர் தொல்பொருட்கள்
உடைந்த செங்கற்கள்



சித்திர ஓடுகள்



மண்பாண்டங்கள்



2000 கோடி ஆண்டுகட்கு முற்பட்ட கல்மரம்



பண்டைக்காலச் செங்கற்கள்



பஞ்சலோகப் படிமம்—
பன்னீர் தெளிக்கும் பசு



அகிலாண்டபுரம் ஐயனார்



சங்கரர் ஐயனார்



'கீழிருந்துமேல்' கல்வெட்டு

# [6] கலைமகளில் தொல்பொருள்கள்

கிரேக்க மொழியில் 'ஆர்க்கியாலஜி' (Archaeology) எனப்படும் பிரிவைத் தமிழில் தொல்பொருள் ஆராய்ச்சி என வழங்கலாம். இது மண்ணுக்கடியில் புதைந்து மறைந்து கிடக்கின்ற மனித இனத்தின் பண்டைய நாகரிகச் சின்னங்களை அகழ்ந்தெடுத்து வெளிப்படுத்தும் ஆராய்ச்சியாகும். இந்தச் சொல்லை இரண்டாகப் பிரித்துக் பொருள் காணின் ஆதிகாலத்தைப் பற்றி ஆராயும் அல்லது விளக்கும் அறிவியல் என்றாகும்.

இவ்வுலகில் மனிதன், என்று தோன்றினானோ அன்றே வரலாறும் தோன்றி விட்டது. மிகப்பழங்காலம்பற்றி இயம்பும் இலக்கியங்கள், வரலாற்றுஏடுகள், கல்வெட்டுக்கள், காசுகள் போன்றவை தோன்றுவதற்கு முன்னர் வாழ்ந்த மக்களது வாழ்க்கை, நாகரிகம், பண்பாடு ஆகியவற்றைப் பற்றி அறிய இத்தொல்பொருள்களே நமக்கு உதவுகின்றன. ஒருபகுதியின் வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட நிலையை வெளிப் படுத்தும் திறன் இத்தொல் பொருளுக்கே உரித்ததாகும்.

பண்டைக்கால மக்கள் உருவாக்கியபொருள்களைத்தேடும் முயற்சிகள், அதுபற்றிய தொடர் ஆராய்ச்சிகள் ஆகியவை

மட்டுமன்றி கண்டுபிடித்த பழம்பொருள்களை ஆராய்ந்து அவர்கள் வாழ்க்கையின் கடந்தகால நிகழ்ச்சிகள், பல படிப் படியான முன்னேற்ற நிலைகள், அவற்றின் தொடர்புகளைக் காட்டல் ஆகியவை இவ்வியலில் அடங்கும். மனிதன் இவ்வுலகில் தோன்றியது முதல் அவனை நிழலாகத் தொடர்ந்து அவனது வாழ்க்கை வரலாற்றினைத் துருவி ஆராயும் ஓர் இயல் என்று இதனைச் சுருங்கச் சொல்லலாம்.

பழமையான சின்னங்கள், தங்கம், வெள்ளி, இரத்தினக் கற்கள் போன்றவை அடங்கிய அழகிய தொல்பொருள்களை பற்றி மட்டுமே ஆராய்ச்சி செய்யவேண்டும் என்பதில்லை· பழங்காலத்து

முதுமக்கள் தாழிகள்
மண்பாண்டங்கள்
சங்கு வளையல்கள்
பிற அணிகள்
எலும்புத் துண்டுகள்
மண்டை ஓடுகள்
கல் ஆயுதங்கள்
பிறவகைக் கற்கள்
செங்கற்கள்

போன்றவற்றிற்கு இந்தத் தொல்பொருள் ஆராய்ச்சிகளில் மிக முக்கியமான இடம் உண்டு. இவை அனைத்தும் கலை மகள் தொல்பொருள் கலைக்கூடத்தில் ஒரு சேர இடம் பெற்றுள்ளன. பெருமைக்கும் சிறப்புக்கும் உரியவை இவை.

இவை அனைத்தும் கொங்கு நாட்டில் தேடி எடுக்கப் பட்ட பொருட்கள். குறிப்பாக பெரியார் மாவட்டத்தைச் சார்ந்தவை. எனவே பெரியார் மாவட்டத்தின் தொன்மை

ஆராய்ச்சிக்கும் கொங்கு நாட்டுக் கலை ஆய்வுக்கும் இன்று கலைமகளே ஒரு முக்கியமான மையமாக விளங்குகிறது.

ஏற்கனவே 1960 முதல் 1963 முடிய சென்னை எழும்பூர் மியூசியத்தின் தொல்பொருள் பகுதிக் காப்பாட்சியராக விளங்கும், திரு. வி. என். சீனிவாசதேசிகன் அவர்கள் பெரியார் மாவட்டத்தின் பல தொல்பொருள் சின்னங்கள் பற்றி நேரில் ஆராய்ந்துள்ளார். அவை "Indian Archaeology - A Review" என்ற நூலில் விளக்கமாக வந்துள்ளது.

பண்டைக்காலக் கொங்கின் ஏற்றமிகு வரலாற்றைக் கூறும் பண்டைப் பொருட்களைக் கண்டு களிப்போம் வாருங்கள். அவைகள் நம் முன்னோர் வாழ்ந்த கதையை நமக்குப் படம் பிடித்துக் காட்டுகின்றன.

# [7] மண்பாண்டங்கள்

தொல்பொருளியலில் மண்பாண்டங்கள் மிகமுக்கியமான இடத்தைப் பெறுகின்றன. சரித்திரக்காலத்தின் முற்பட்ட மக்களின் வாழ்க்கை முறை, பழக்க வழக்கம், பண்பாடு, கலை வளர்ச்சி கைத்தொழில் திறன் ஆகியவைகளை மதிப்பிட்டு அளக்கும் அளவுகோலாக மண்பாண்டங்கள் விளங்குகின்றன. ஏனெனில் அவர்கள் தங்கள் வாழ்க்கையில், நாள் தோறும் பயன்படுத்திய பொருட்களில் மண் பாண்டங்களே மிகுதியாகும். அகழ்வாய்வு செய்யும்போது கிடைக்கும் பொருட்களில் மிகுதியும் பானைகளும், பானை ஓடுகளுமே உள்ளன.

அந்த வகையில் கலைமகள் தொல்பொருள் கலைக்கூடம் ஏறத்தாழ 60-க்கும் மேற்பட்ட பல்வேறு வகைப்பட்ட மண் பாண்டங்களை பெற்றுச் சிறந்து விளங்குகிறது. அவைகளைப் பின்வருமாறு பிரித்து ஆராயலாம்.

## முதுமக்கள் தாழி

'மெகலிதிக்' காலம் எனப்படும் பெருங்கற்காலத்தில் புதைக்கப்பட்ட பல்வேறு சவக்குழிகள் தமிழகமெங்கும்

கிடைக்கின்றன. கொங்கு நாட்டில் கெய்ர்ன் எனப்படும் கல் வட்டமும் டால்மன் எனப்படும் கல்அறைகளும் மிகுதியாகக் கிடைக்கின்றன.

சிறிய மண்மேடும், அதைச்சுற்றிலும் வட்டமாகப்பெரிய உருண்டைக்கற்களும் வைக்கப்பட்டிருக்கும். வாயில் கிழக்குப் பார்த்திருக்கும். பலகைக்கல் வைக்கப்பட்டிருக்கும். நிச்சாம்பாளையம் [சீனாபுரம் அருகே] குடியாம்பாளையம், பாசூர் போன்ற இடங்களில் நீண்ட உயரமான பலகைக்கல், நடப்பட்டிருக்கும். பாசூரில் அதனை வேடன்கல்காடு என்று அழைக்கின்றனர். பெருந்துறையை அடுத்த நல்லாம் பட்டியில் இதனைத் தோண்டியுள்ளனர். இவ்வாறான இடங்களில்தான் முதுமக்கள் தாழிகள் அல்லது ஈமத்தாழி கள் கிடைக்கின்றன.

இவ்வாறான தாழிகள் உள்ள இடங்கள் பெரியார் மாவட்டத்தில் கருமாண்டி செல்லிபாளையம், கதிரம்பட்டி, பாண்டியம்பாளையம், நிச்சாம்பாளையம், பள்ளியூத்து, தோரணவாவி வெட்டியாங்கிணறு, சின்னக்கவுண்டன் வலசு, மாரயன்பாளையம், நல்லூர், பனயம் பள்ளி, எலவமலை, ஞானிபாளையம், பாசூர், குடுமியான் பாளையம் ஆகிய இடங்களில் இருக்கின்றன.

பண்டைக்காலத்தில் இறந்தோரை அடக்கம் செய்யப் பல வழிகள் பயன்படுத்தப்பட்டு வந்தன. அவைகளை மணிமேகலை பின்வருமாறு கூறுகிறது.

"சுடுவோர் இடுவோர் தொடுகுழிப் படுப்போர்
தாழ்வயின் அடைப்போர் தாழியில் கவிப்போர்"

தாழியில் கவிப்போரே முதுமக்கள் தாழியைப் பயன் படுத்தியுள்ளனர். இதனை ஒரு சோழன் முதலில் கொண்டு

வந்ததாக மூவருலாவில் ஒட்டக் கூத்தர் கூறுகின்றார். "முது மக்கட் சாடி முதலோன்" என்று அவனை அந்த இலக் கியம் புகழுகிறது.

புறநானூற்றில்,

"தேவர் உலகம் எய்தினன் ஆதலின்
அன்னோன் கவிக்கும் கண்ணகன் தாழி"

என்று பேசப்படுகிறது.

இதனைச் செய்பவனைப் புறம் "கலம்செய்கோ" என்று அழைக்கிறது. இத்தாழிகள் பற்றி நற்றிணை [271]புற நானூறு [238, 364]பதிற்றுப்பத்து [46] தக்கயாகப்பரணி [876] ஆகிய நூல்கள் பேசுகின்றன. இத்தாழிகள் ஒவ்வொன்றாகவும் கூட்டமாகவும் புதைக்கப்படும்.

இப்புதைக்குழிகள் உள்ள பல இடங்களை ஐயா அவர் களும், கலைமகள் தலைமையாசிரியை அவர்களும் பலமுறை சென்று பார்த்துப் பாராட்டியுள்ளனர்.

இவைகளைப் பாண்டவர் குழிகள் என்கின்றனர். பாண் டவர்கட்கும் இதற்கும் தொடர்பு இல்லை. உண்மையில் இவை மாண்டவர் குழிகளே.

ஒருமுறை இப்புதைகுழிகள் உள்ள இடத்திற்கு கோவையில் உள்ள மகளிர்பள்ளிகளின் ஆய்வாளர் திருமதி மீனாட்சி அவர்களை தலைமையாசிரியை அவர்கள் அழைத்துச் சென்றார்கள். தொகுப்பு ஆசிரியர் இராசு உடன் சென்று விளக்கினார்.

இந்தப் பெருமைக்கு மகுடம் சூட்டியதுபோல் கலை மகள் குழந்தைப்பள்ளியில் 13-4-1972 அன்று குடிநீர்க் குழாய் தோண்டும்போது புறம் பாடியதுபோல [கண்ணகன் தாழி]மிகப்பெரிய தாழியும், பல சிறு மண்பாண்டங்களும்

கிடைத்தன. உள்ளே இரண்டு எலும்புக்கூடுகள் இருந்தன உடனே மருத்துவ நிபுணர்கள் அழைக்கப்பட்டனர். அவர்கள் அந்தக் எலும்புக் கூடுகளை ஆணும் பெண்ணும் என்று தீர்மானித்தனர். அவை கணவனும் மனைவியுமாக இருந்திருக்கவேண்டும். முதுமக்கள் தாழியுள் எலும்புக்கூடு வடிவத்திலும் பிரியாமல் வாழ்ந்த அவர்களின் சிதைந்த எலும்புகள் பத்திரமாகப் பாதுகாத்து வைக்கப்பட்டுள்ளது. முதுமக்கள் தாழியும் மிகப் பாதுகாப்புடன் தனி அறையில் காட்சிக்கு வைத்துப் பூட்டிவைக்கப்பட்டுள்ளது. பல்லாயிரம் மக்கள் பார்த்து மகிழ்கின்றனர்.

## கறுப்பு – சிவப்பு நிற மண் பாண்டங்கள்

இவ்வகை மண்பாண்டங்களை முன்பு மெகலிதிக்—பெருங்கற்கால—மண்பாண்டவகை என்று குறிப்பிட்டனர். தமிழகத்தின் பல பகுதிகளில் இவ்வகை மண்பாண்டங்கள் கிடைக்கின்றன.

இதன் உட்பக்கம் கறுப்பாகவும், விளிம்பு தவிர ஏனைய வெளிப்பக்கம் முழுவதும் சிவப்பு நிறமாகவும் காணப்படும். இவ்வகை பாத்திரங்களில் சில பளபளப்பாகவும், வழவழப்பாகவும் காணப்படும்.

இப்பானைகள் செய்கின்றவர்களின் விருப்பத்திற்கு ஏற்றவாறும், தேவைக்குத் தக்கவாறும் பல்வேறு வடிவங்களில் கிடைக்கின்றன.

கலைமகள் தொல்பொருள் கலைக்கூடத்தில் இவ்வகையான பாண்டங்கள், நீர்க்குவளை, தண்ணீர்ச்சாடி, சிறுதட்டுக்கள், தாங்கிகள், கிண்ணம், அகன்ற தட்டுக்கள் ஆகியவை சுமார் 15 இருக்கின்றன. இவைகளில் பெரும்பகுதி கலைமகளிலேயே எடுக்கப்பட்டவை.

இவைகள் எவ்வாறு உள்பக்கம் கறுப்பாகவும், வெளிப் பக்கம் சிவப்பாகவும் உள்ளன என்பது மிக வியப்பான தாகும். தொல்பொருள் ஆய்வாளர்கள் இது சுடும் முறை யால் ஏற்படுகின்றது என்று கூறுகின்றார்கள்.

சூளையில் பானைகள் ஒன்றின் மேல் ஒன்றாகத் தலை கீழாக அடுக்கி வைக்கப்படும். இது ஒருவகைத் தனிப்பட்ட சுடும் முறையாக அமையும். உள்பகுதியில் காற்றுப் புகாது. வெளிப்பக்கமே காற்றுப்படும். சுடும்போது இதனால் ஏற் படும் இரசாயன மாறுதலால் உள்ளே கறுப்பாகவும், வெளிப் பக்கம் சிவப்பாகவும் மாறுகிறது. இவ்விசேட அடுக்கும் முறையால் விளிம்பும் கறுப்பாக மாறுகிறது. சிவப்பு நிறத்தின் தன்மை சுடுகின்ற தன்மையைப் பொறுத்திருக்கும். சுடுவ தற்கு முன் இம்மண் பாண்டங்களின் மேல் ஒருவகைச் செங் காவிப் பூச்சுப் பூசப்படும்.

இதனுடன் வெளிப்பக்கம் குறுக்கும் நெடுக்குமாக பல வகைக்கோடுகள் ஒரேசீராக அழகாக வரையப்பட்டிருக்கும். இவ்வகைப் பானைகள் கொங்கு நாட்டில் மிகுதியாகக் காணப்படுகிறது.

கலைமகள் தொல்பொருள் கலைக்கூடத்தில் சுமார் 6 மண்பாண்டங்களில் அழகிய இவ்வரிகள் வரையப் பட்டுள்ளன. பளபளப்புடன் அழகிய வேலைப்பாட்டையும் பெற்றுள்ளன.

## வண்ணப் பூச்சும் வெண்கோடும் உடைய மண்பாண்டங்கள்

பழங்கால மண்பாண்ட வகையில் இது சிறப்பு வாய்ந் தது. சுமார் 100 ஆண்டுகட்கு முன் ராபர்ட் புரூஸ் இது பற்றி நன்கு ஆராய்ந்துள்ளார். பானையைச் செய்து முடித்த

வுடன் ஈரத்துடன் இருக்கும்போதே வெண்மையான ஒரு கலவை கொண்டு வண்ண ஒப்பனை செய்வார்கள். அதனை நிழலிலேயே காயவைத்து உலர்ந்தவுடன் சிவப்பு நிறப் பூச்சு ஒன்றைப் பூசுவர். தீயில் சுடப்பட்டபின் வண்ணப் பூச்சு நல்ல மெருகுடன் காணப்படும்.

கலைமகளில் வாய் குறுகிய பூக்குவளை போன்ற அழகிய பாத்திரம் ஒன்றும் சில தட்டுக்களும் இவ்வகை அமைப்பினைக் கொண்டவை. அலை அலையான கோடுகள், வளைந்து நெளியும் கோடுகள், நேர்க் கோடுகள், குறுக்குக் கோடுகள் குறிப்பிடத் தக்கவை.

## கறுப்பு நிறப் பாண்டங்கள்

இவ்வகைப் பாத்திரங்கள் உள்ளே, வெளியே ஆகிய இரு பக்கங்களிலும் கறுமை நிறத்துடன் காணப்படும். இவை கள் மிக உயர்ந்த ரகத்தைச் சார்ந்தவை என்று தொல்பொருள் ஆய்வாளர்கள் மதிப்பிடுகின்றனர். கால வரம்பிலும் தன்மை யிலும் இவை கறுப்பு—சிவப்பு மண்பாண்ட வகையைச் சேர்ந்தாலும் இருபக்கங்களிலும் பளபளப்புடன் மின்னுவது இதன் விசேடமாகும்.

கலைமகளில் இவ்வகைப் பாண்டங்கள் ஆறு இருக் கின்றன. இவை மிக உயர்ந்தவை, அரியவை. மூன்று வகைப் பாண்டங்கள். தென்னிந்தியாவில் இவை போன்ற அமைப்புடையவை கலைமகள் தவிர வேறு எங்குமில்லை என்று கூறலாம்.

இத் தனிக் கறுப்பு மண்பாண்டங்கள் பெரியார் மாவட்டம் ஈரோடு வட்டம் பள்ளியூத்தில் கிடைத்தவை. அங்கு பள்ளியாசிரியர் எடுத்துப் பத்திரப் படுத்தி வைத்

திருந்ததைத் தகவல் அறிந்து ஐயா அவர்களும், தலைமை யாசிரியை அவர்களும் தொகுப்பாசியர் அவர்களுடன் சென்று பெற்று வந்தார்கள். அவை முதுமக்கள் தாழிக்குள் இருந்தன.

இக்கறுப்பு வகைமண் கொங்குநாட்டில் எங்கும் இல்லை. எப்படி இவை வந்தன? பிற பகுதியிலிருந்து இவை வந்திருக்க வேண்டும். தொல் பொருள் நிபுணர்கள் இவை சாதவாகனக் கலையமைப்பைச் சேர்ந்திருக்க வேண்டும் என்று கூறுகிறார்கள்.

## பழுப்பு நிற மண்பாண்டங்கள்

இவ்வகை மண்பாண்டங்கள் சற்றுக் காலத்தில் பிந்தியவை. தாங்கிகள் போன்ற அமைப்புடைய பாத்திரங்களும், வாய் அகன்ற பாத்திரங்களும் கலைமகள் தொல்பொருட் கலைக்கூடத்தில் உள்ளன.

## சிவப்பு நிற மண்பாண்டங்கள்

சில சிவப்பு நிற மண்பாண்டங்கள் இங்கு உள்ளன. இவை சிவப்பு வண்ணப் பூச்சுகளுடன் கூடியவை.

## ரோமானிய வகை மண்பாண்டம்

தமிழகத்துடன் சங்க காலத்திலேயே ரோமானியர் தொடர்பு இருந்ததற்குச் சங்க இலக்கியங்களிலேயே சான்றுகள் உள்ளன. ரோமானியர்களின் ‘ரவுலடெட்’ ‘அரிடைன்’ ‘அம்போரா’ வகைப் பாண்டங்கள் தமிழ் நாட்டில் கிடைக்

கின்றன. வாய் அகன்ற கீழ்பக்கம் குறுகியவை அம்போரா எனப்படும்.

கலைமகள் தொல்பொருள் கலைக்கூடத்தில் அம்போரா வகைப் பாண்டம் ஒன்றுள்ளது. அம்மண் பாண்டம் பெருந்துறைக்கு அருகில் உள்ள நிச்சாம்பாளையத்தில் கிடைத்தது. ஐயா அவர்கள் நேரில் சென்று வாங்கி வந்தார்கள். அம்போரா என்பது மது வைக்கப்பட்ட பாத்திரம் என்று அறிஞர் கருதுவர்.

## 'லோதல்' வகை ஓடுகள்

அரப்பா, மொகஞ்சதாரோ நாகரிகத்துடன் சம கால நாகரிகம் ஒன்று குசராத் மாநிலத்தில் உள்ள லோதலில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. கனமற்ற ஆனால் மிக உறுதியான செம்மைப் பளபளப்பு வண்ணமும் வரிகளும் உடைய சில லோதல் ஓடுகள் இங்கு இருக்கின்றன.

இந்தப் பானைகளும் ஓடுகளும் சுடுமண்கலையையும், பழந்தமிழர் ஓவியத்திறன் கலையுணர்வு ஆகியவைகளைக் காட்டுகின்றன.

## இவைகளின் காலம் என்ன?

திருநெல்வேலி மாவட்டம் கொற்கையில் கிடைத்த இவ்வகை ஓடு ஒன்றை கார்பன் -14 முறையில் கால ஆராய்ச்சி செய்ததில் அவை கி.மு. 8ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது.

பெருங்கற்காலப் பண்பாடு ஏறக்குறைய தமிழகமெங்கும் ஒரே காலத்தில் வழங்கப் பெற்றதாகக் கருதப்படுவதால் இந்தத் தாழி, மண்பாண்டங்கள் ஓடுகளின் காலம் ஏறத்தாழ 2500 ஆண்டுகட்கு முற்பட்டதாகக் கருதலாம்.

## 'கிராபிடி' அடையாளங்கள்

சில பாத்திரங்களின் உள்ளே அல்லது வெளியே பல் வேறு கோடுகளைக் கொண்ட குறிகளைக்காணலாம். இவை 'கிராபிடி' அடையாளம் என்று குறிப்பிடுவர்.

பானையைச் செய்து முடித்தவுடன் நன்கு உலர வைப் பதற்கு முன்பாக இக்கோடுகள் வரையப்படலாம். சில சமயங் களில் பானை சுடப்பட்ட பின்னர்கூட இக்குறிகள் வரையப் படலாம். இரு நூறுக்கும் மேற்பட்ட கிராபிடி கோடுகள் இது வரை கண்டு பிடிக்கப்பட்டுள்ளன.

இந்தக் குறிகளுக்கு இதுவரை இன்னும் சரியான விளக்கம் கொடுக்கப்படவில்லை. ஒரு காலத்தில் இவை எழுத்துக்கள் என்று கருதப்பட்டன. சிலருடைய ஆய்விலி ருந்து இவை மண்பாண்டங்களைச் செய்தவர்களின் பெயர் அல்லது விற்போர் பெயர் என்று கருதப்பட்டது.

இந்தக்குறிகள் அக்காலமக்கள் பின்பற்றிய சமயநெறி களையோ கடவுளர்களின் பெயர்களையோ குறிக்கின்றன என்பர். எப்படியாயினும் இக்குறிகள் பழங்காலமக்களின் சமூக அமைப்பையும், அவர்களின் பண்பாட்டுச் சிறப்பினை யும் விளக்குகிறது.

கலைமகள் கலைக்கூடத்தில் ஏறத்தாழ ஆறு கிராபிடி குறிகள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. அவை ஐந்து, ஆறு மூன்று கோடுகளைக் கொண்டு இருக்கின்றன. பஞ்ச பூதங் களையோ, ஆறுமுகனையோ, சிவனுடைய சூலத்தையோ குறிப்பதாக இருக்கலாம். அறிஞர்கள் இதுபற்றி ஆய்வு நடத்துவார்களாக!

## இதர மண்பாண்டங்கள்

மிகச் சிறிய அகல் விளக்குகளும், பெரிய அகல்விளக்கும் பால் சங்கும் கிடைத்திருக்கின்றன. அவைகளும் கலைமகள் தொல்பொருள் கலைக்கூடத்தில் பாதுகாக்கப்படுகின்றன.

ஐயா அவர்களின் தந்தை சீரங்க முதலியார் அவர்கள் வீடு ஈரோடு கோட்டையில் இருந்தது. அந்த வீட்டை அண்மையில் திருப்பணிசெய்தபோது கழிவுநீர்க் குழாய்கள் சில அகப்பட்டன. அவை சுமார் 100 ஆண்டுகட்கு முற்பட்ட சாக்கடை அமைப்பினை நாம் அறிய உதவுகிறது.

ஐயா அவர்களின் வீட்டிலேயே அவை கிடைத்திருப்பது மிகச் சிறப்புடையதாகும்.

# [8] சங்கு வளையல்கள் ஆபரணங்கள்

மேற்கூறிய பானைகள் கிடைக்கும் இடங்களில் பல் வேறு ஆபரணங்களும் கிடைப்பது வழக்கம். பண்டைக்கால மக்கள் சங்குகளை அறுத்து வளையல் செய்து அணிந்து வந்தனர். கலைமகள் தொல்பொருள் கலைக்கூடத்தில் சங்கு வளையல்களின் பகுதிகள் சில கிடைத்துள்ளன. பழமங்கலத் தில் கிடைத்த சங்கு வளையல் நல்ல அழகான கோடு களுடன் உள்ளன. சில வெள்ளி பித்தளையிலான பழங்கால காதணிபோன்ற ஆபரணங்களும் கிடைத்துள்ளன. வேமாண்டம்பாளையம் புலவர் வி. கே. பச்சையப்பன் அவர் களால் அவை அளிக்கப்பட்டன.

## ஏனைய தொல்பொருட்கள்

சிதைந்த கை கால் எலும்புகளும், மண்டைஓட்டின் பகுதிகளும், இரண்டாயிரம் ஆண்டுகள் ஆகியும் உடைந்து சிதையாத உறுதியான பற்களும் இங்கு உள்ளன.

சரித்திர காலத்தின் முற்பட்ட சின்னங்கள்பற்றி ஆராய்ச்சி செய்யும் ஆய்வாளர்களுக்குத் தேவையான பல பொருட்கள் கலைமகளில் உள்ளன. மேற்கொண்டு ஆய்வு நடத்த ஒரு சிறந்த மையமாகக் கலைமகள் கலைக்கூடம் விளங்குகிறது.

# [9] ஆதிச்ச நல்லூர்த் தொல்பொருள்கள்

பாண்டிய நாடு பழம்பெரும் நாடு. அங்கே நெல்லை மாவட்டத்தில் பாளையங்கோட்டை அருகே தாமிரபரணி யாற்றின் தென்கரையில் உள்ள ஊர் வேலூர் எனப்படும் ஆதிச்சநல்லூர். அதனை ஆதித்தநல்லூர் எனவும்வழங்குவர்.

அவ்வூரில் ஏறத்தாழ 100 ஏக்கர் பரப்புக்குமேல் பெருங் கற்கால நாகரிகச் சின்னங்கள் கிடைக்கின்றன. இந்தியத் தொல்பொருளியலார் ஆதிச்சநல்லூர் வகை என்று சொல்லு மளவுக்கு தனிச்சிறப்புப் பெற்ற பொருட்களைக் கொண்டது அவ்வூர்.

அங்கே கி. பி. 1876 ஆம் ஆண்டு முதன்முறையாக அகழ்வாய்வு செய்து டாக்டர் ஜாகர் என்பவரால் பல தொல் பொருட்கள் ஜெர்மனி கொண்டு செல்லப்பட்டது. 1901ஆம் ஆண்டு ஏ. ரீ. என்பவரால் அகழ்வு ஆய்வு மேற்கொள்ளப் பட்டது.பொன், வெண்கலம், இரும்பு, கல்,மண் பாண்டங்கள் போன்றவை கிடைத்தன.

அங்குள்ள நாகரிகம் தனித்திராவிடர் நாகரிக ஆராய்ச் சிக்கு இன்றியமையாதது. இலங்கையுடன், அரப்பா நாகரி

கத்துடன், ஈரான் நாட்டுடனும் ஒப்பிட்டு ஆராயக்கூடிய வகையில் பல பொருட்கள் கிடைத்துள்ளன.

அரிக்கமேடு போலவே ஆதிச்சநல்லூரில் குடியிருப்புகளும், புதைகுழிகளும் இருந்தன.

சங்கஇலக்கியம் போற்றும் சுடுமண் அமைப்பிலான குடியிருப்புப் பகுதியின் வேலைப்பாடு மிக்க செங்கற்களும், செதுக்கப்பட்டகல்லும் கிடைத்துள்ளது. கலைமகளில் இவை இரண்டும் உள்ளன.

ஈமத்தாழியின் உள்ளும் புறமும் வைக்கப்பட்ட அரிய மண்பாண்டங்களும், சிவப்பு, கறுப்புசிவப்பு ஓடுகளும் வேலைப்பாடுமிக்க வண்ணப் புள்ளிகள், கோடுகள் உடைய தாழிப்பகுதிகள் இங்குள்ளன. இவை சுமார் 3000 ஆண்டுகட்கு முற்பட்டவை.

# [10] கல் ஆயுதங்களும் பிறவகைக் கற்களும்

## கல் ஆயுதங்கள்

உலோகங்கள் இன்னதென்று அறியாத காலத்தில் மனிதன் கற்களையே ஆயுதங்களாகப் பயன்படுத்தி வந்தான்.

கற்களை பயன்படுத்திய வகைபற்றி மூன்றுவகையாக பிரிக்கின்றனர். பழங்கற்காலம். இடைக்கற்காலம், புதுக்கற் காலம் என்பவை அவை. தமிழகத்திலே புதுக்கற் கால ஆயுதங்களே பெரும்பாலும் கிடைக்கின்றன.

சுமார் 100 ஆண்டுகட்குமுன் ராபர்ட்புரூஸ்புட் அவர்கள் கற்காலம் பற்றிய ஆய்வுகளை மிக விரிவாக நடத்தினார். மனித சமுதாயத்தின் நீண்ட தூரப்பயணம், புதிய கற்காலத்தில்தான் என்றும், செம்மைப் படுத்தப்பட்ட கல் ஆயுதங்களே மனித நாகரிகத்தின் புரட்சிகரமான முன் னேற்றம் என்றும் புரூஸ்புட் கூறியுள்ளார்.

புதுக்கற்கால வகைக்கற்களை 75 வகையாக புரூஸ்புட் பிரித்தார். தேய்த்து வழவழப்பு ஆக்கப்பட்டதும், வழவழப்பு

ஆக்கபடாதுதும், கோடரி வகையும் என்று மூன்று பெரும்பிரிவாகவும் பிரித்தார்.

கலைமகள் தொல்பொருள் கலைக்கூடத்தில் மூன்று வகையில் இரண்டுவகையான கற்கள் இருக்கின்றன. கல்வாச்சி, கல்கோடரி ஆகியவையும் கல்வெட்டும் இங்கு உள்ளன. சிறியதும் பெரியதுமாக 12 புதுக்கற்கால ஆயுதங்கள் இங்கு உள்ளன. இவைகளைத் தொல்பொருளியலார் "மதராசு கைக்கோடரிகள்" (Madras Handaxes) என்றே அழைப்பர்.

இவைகள் சில் உடைப்பதற்கும், கொத்துவதற்கும், தேய்ப்பதற்கும். வழவழப்பாக்குவதற்கும் பயன்பட்டன என்பர் அறிஞர். இக்கல் கோடரிகளைத் தவிரச்சிறிய செதில் கருவிகள் பலவும் கலைமகளில் உள்ளன.

இக்கல் ஆயுதங்களைக் கலைமகளுக்கு அன்புடன் வழங்கியவர்கள் தருமபுரி மாவட்டம் கடத்தூர், புலவர் போ. வேங்கடராமன் அவர்களும், சோவையை அடுத்த போளுவாம்பட்டி புலவர் ஐ. இராமசாமி அவர்களும் ஆவார்கள்.

இவை சேர்வராயன் மலை, வெள்ளியங்கிரிமலைஆகிய இடங்களில் சேகரித்தவையாகும்.

## பிறகற்கள்

இந்தக் கற்கால ஆயுதங்கள் தவிரக் கலைமகள் தொல்பொருள் கலைக்கூடத்தில் வேறு சில இன்றியமையாத கல்வகைகள் இருக்கின்றன. இமயமலைக் கற்களும், கன்னியாகுமரி மண்வகைகளும் பேணிப் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. இந்திய ஒருமைப்பாட்டை வலியுறுத்துவது போல அவை இருக்கின்றன.

தென் ஆர்க்காடு மாவட்டத்திலும் திருச்சி மாவட்ட அரியலூர்ப்பகுதியிலும் பல கோடி ஆண்டுகட்கு முற்பட்ட கல்மரங்கள் அகப்படுகின்றன. மரமே கல்லாக மாறிவிட்ட அதிசயத்தைக் காணுகின்றோம். அதே இடத்தில் மணல் கெட்டியாகப் பாறையாக மாறிய மணல்கற்களும் இருக்கின்றன.

திருவக்கரை என்ற இடத்திலிருந்து இங்கு கொண்டு வரப்பட்ட கல்மரமும், மணல்கல்லும் கலைமகளில் உள்ளது.

இரும்புத்தாது உடைய கற்களும் மெகலிதிக் பண்பாட்டுக் காலத்தைச் சார்ந்த ஓடைக்கற்களும், 'மைக்கா' தாது உள்ள கற்களும் இங்கே பாதுகாக்கப்படுகின்றன.

சீலம் நதிக்கரைக் கற்கள் இங்கே உள்ளன. மெக்காவி லிருந்து கொண்டுவரப்பட்ட புனிதக் கற்களும் உள்ளன.

உலகில் உள்ள எல்லாவகையான கற்களையும் மாதிரிக் காக எடுத்து ஒரு கண்ணாடிக் கூண்டுக்குள் அடைத்து பார்வைக்காக அமெரிக்காவிலிருந்து கொண்டுவந்துகலைமகளில் வைக்கப்பட்டுள்ளது. இன்னும் பல்வேறு படிகக்கற்களும், பச்சை, நீலம், வெண்மை நிற வைரக்கற்களும் உள்ளன.

வட அமெரிக்காவில் அரிசோனா என்னும் இடத்தில் மாபெரும் விண்வெளிக்கல் ஒன்று விழுந்து மிகப் பெரிய குழியை உண்டாக்கியது. அந்தவிண்வெளிக்கல்லின் ஒரு பகுதியும் இங்கே உள்ளது. பச்சை மணிக்கல் உருவாகும் நிலையில் உள்ள கல் ஒன்றை சென்னிமலை புலவர் வேலுசாமி கலைமகளுக்கு அளித்துள்ளார்.

## செங்கற்கள்

மிகப் பழங்காலத்தில் மனிதன் சுடப்படாத செங்கற்களை பயன்படுத்தி வந்தான். ஆனால் சங்க இலக்கியம் "சுடுமண்

ஓங்கிய நெடுநகர்வரைப்பு' என்று சுட்ட செங்கற்களைப் பற்றிக் கூறுகிறது. முற்காலப் பல்லவர் காலம் வரையிலும் கோயில்களைக் கட்டுவதற்குச் செங்கற்களையே பயன் படுத்தினர்.

புகாரிலும், கங்கை கொண்டசோழபுரத்திலும், கரூரிலும் அளவில் பெரிதான செங்கற்கள் கிடைக்கின்றன.

கலைமகள் கலைக்கூடத்தில்மிகச்சிறப்பான செங்கற்கள் இருக்கின்றன.

சங்க காலத்தில் கொங்கு நாட்டை ஆட்சி புரிந்த மன்னன் அதியமான். அவன் ஆட்சி புரிந்தது தகடூர் என்ற பழமையான நகரிலிருந்து. அந்தத் தகடூர் இன்று தருமபுரி என்று வழங்கப்படுகிறது. தருமபுரிக்குத் தெற்கே அதியமான் கோட்டை என்ற ஊரொன்று உள்ளது. ஆனால் அங்குள்ள 52 கல்வெட்டுக்களும், அவ்வூரை மகேந்திர மங்கலம் என்றும் மகேந்திர மங்கலத்துப் பெருவாயில்என்றும் கூறுகின்றன. அப்படியானால் உண்மையான அதியமான் கோட்டை எங்கிருந்தது.

தருமபுரியின் வடகிழக்கே பெண்ணையாற்றங்கரையில் "கோட்டை மேடு" என்ற மிகப் பெரிய பகுதி ஒன்று உள்ளது. அக்கோட்டை மேடு மிகப் பெரிய செங்கற்களால் ஆன கோட்டைச் சுவரின் அடிப்பகுதியைப் பெற்று விளங்குகிறது.

அதியமானைப் பற்றி ஆய்வு செய்யத் தொகுப்பாசிரியர் சென்றபோது மிகப்பெரிய அதியமான் கோட்டைச் செங்கல் ஒன்றைக் கொண்டு வந்தார்.

கோவையின் வடமேற்கே போளுவாம்பட்டி அருகே உள்ள முட்டம் மிகப்பழமையான ஊர். அண்மையில் தமிழக

அரசின் தொல்பொருள்துறையினர் அங்கு அகழ்வாய்வு செய்து பல அரிய பொருட்களைக் கண்டு பிடித்தனர். அங்கும் ஒரு பழைய கோட்டை இருந்தது அக்கோட்டையின் பெரிய செங்கல் துண்டுகள் இரண்டை புலவர். ஐ இராமசாமி அளித்தார். இம்மூன்று கற்களும் கலைமகள் கலைக் கூடத்தில் உள்ளன.

## சிங்களத் தீவின் செங்கல்

1978 ஆம் ஆண்டு கலைமகள் கல்வி நிலையத்தி திலிருந்து தலைமையாசிரியை அவர்கள், ஆசிரியைகளும் மாணாக்கியர்களும் இலங்கைப் பயணம் சென்றனர். இலங் கையின் வரலாற்றுப் புகழ் பெற்ற பல இடங்களைச் சென்று கண்டனர்.

பிறகாலச் சோழ அரசர்கள் பலர் இலங்கை மீது படை யெடுத்து வெற்றி கொண்டனர். தஞ்சைப் பெரிய கோயில் திருப்பணி செய்த பேரரசன் முதலாம் இராசராசனும் "எண்டிசை புகழ்தரு ஈழமண்டலத்தை" வென்றான்.

அனுராதபுரம் எனப்படும் இலங்கையின் மையத்தில் அமைந்துள்ள பெருநகருக்கு 'மும்முடிக் சோழபுரம்' என்று பெயரிட்டு பல திருப்பணிகளை அங்கு செய்தான்.

வானவன் மாதேவீச்சுரம் முதலிய பல சிவாலயங் களைக் கட்டினான். சமயப்பொறையுடைய இராசராசன் பௌத்தப் பள்ளிகள் பலவற்றையும் கட்டி வைத்தான். தமிழ் நாட்டுச் சிற்பிகள் பலரை அழைத்துக் கொண்டு சென்று தான் இராசராசன் கட்டினான் என்பர்.

அங்கு கிடைத்த மூன்று செங்கற்களை அரிதின் முயன்று கொண்டு வந்து கலைமகள் கலைக்கூடத்தில் வைத்

துள்ளனர். சுமார் 1000 ஆண்டுகட்கு முன் இராசராசன் கட்டிய கோயிலின் மூன்று செங்கற்கள்தான் நம் முத்தமிழ் நாட்டைக் காண வந்துள்ளது. வரலாற்றுச் சிறப்புமிக்க இக் கல் தமிழரின் வெற்றிச் சிறப்பைப் பறை சாற்றுகிறது என்று கூடச் சொல்லலாம். பாரதி கூறியது போல சிங்களத்தீவின் உறவுப்பாலமாக இவை விளங்குகிறது.

தமிழ்நாட்டை ஒன்பதாம் நூற்றாண்டிலிருந்து பதின் மூன்றாம் நூற்றாண்டுவரை அரசு செய்துவந்த சோழமன்னர் களின் காலம்தான் கலையழகு மிக்க எண்ணற்ற செப்புத் திருமேனிகள் ஆக்கப்பட்ட காலம்.

ஆனால் அதற்கு முற்பட்ட இலக்கியங்களிலே நாம் உலோகப்பாவை பற்றிய பல குறிப்புக்களைக் காணுகின் றோம். மதுரைக்காஞ்சியும் (410) அகநானூறும், (127 212) குறுந்தொகையும் (292) பெருங்கதையும்(1-40)பொற் பாவைகள் பற்றிக் குறிப்பிடுகின்றன. பல்லவ நந்திவர்மன் காலக் கல்வெட்டும் பொற் படிமங்கள் பற்றிக் கூறுகின்றன.

# [11] செப்புப் படிமங்கள்

தமிழ்நாட்டை ஒன்பதாம் நூற்றாண்டிலிருந்து பதின் மூன்றாம் நூற்றாண்டுவரை அரசு செய்து வந்த சோழ மன் னர்களின் காலம்தான் கலையழகு மிக்க எண்ணற்ற செப்புத் திருமேனிகள் ஆக்கப்பட்ட காலம்.

ஆனால் அதற்கு முற்பட்ட இலக்கியங்களிலே நாம் உலோகப்பாவை பற்றிய பல குறிப்புக்களைக் காணுகின் றோம். மதுரைக் காஞ்சியும்,(210) அகநானூறும்,( 127, 212) குறுந்தொகையும், (292) பெருங் கதையும், (1 - 40) பொற்பாவைகள் பற்றிக் குறிப்பிடுகின்றன. பல்லவ நந்தி வர்மன் காலக் கல்வெட்டும் பொற்படிமங்கள் பற்றிக் கூறுகின்றன. செம்பு, வெண்கல வேலை செய்பவர்கள் பற்றி சிலப்பதிகாரமும் (1:5) மணிமேகலையும் (28:35) கூறுகின்றன.

கனமாகவோ அல்லது உள்ளீடு அற்றுப் பொள்ள லாகவோ செப்புத் திருமேனிகள் செய்யப்படும்.

கனமாக உலோகத்தால் ஒரு உருவம் செய்ய வேண்டு மாயின் முதலில் மெழுகில் அந்த உருவத்தைச் செய்து, பிறகு அதன்மீது மண்ணைப் பூசவேண்டும். தேர்ச்சி பெற்ற கை வினைஞர் பொன் அல்லது மற்ற உலோகங்களைத்

தூய்மைப்படுத்தி, அச்சில் ஊற்றி, முற்றிலும் கனமான ஓர் உருவத்தைச் செய்கின்றனர்.

உள்ளீடு அற்ற பொள்ளலாக ஒரு உருவத்தைச் செய்ய வேண்டுமானால் மண்ணைப் பிடித்து அதன்மீது மெழுகினால் உருவத்தைச் சமைத்து, பின்னும் அதன்மீது மண்ணைப் பூசவேண்டும். பிறகு இதை நெருப்பிலிட்டால் உள்ளே இருந்த மெழுகு உருகி மண்ணுரு மாத்திரம் இருக்கும். இந்த அச்சில் உலோகத்தை உருக்கி ஊற்றினால் கனமற்ற உருவம் பெறலாம்.

கோவை மாவட்டம் சிங்க நல்லூரில் நின்று உலகம் தாவிய நெடுமாலின் செப்புத்திருமேனியும், பெரியார் மாவட்டத்துக் கொடுமுடியில் அம்பலத்தாடும் அழகனுடைய குஞ்சிதபாதமூர்த்தி வடிவமும் கொங்கு நாட்டுக் கலைக்கு மிகச் சிறந்த எடுத்துக்காட்டு.

கொங்கு நாட்டு வானியாற்றுப் பகுதியில் உயர்ந்த செம்பு எப்படி எடுக்கப்பட்டது என்று சோழன் பூர்வபட்டயம் மிக விளக்கமாகக் கூறுகிறது. அச்செம்பை கொண்டு சோழன் தன் நாட்டில் பல திருமேனிகள் செய்ய அனுப்பினானாம்.

செப்புத் திருமேனிகள் என்று பொதுவாகக் கூறினாலும் அவற்றில் பெரும்பாலும் ஐந்து வகையான உலோகக் கலவைகள் இருக்கும். அதனால் அவை "பஞ்சலோகம்" அல்லது "ஐம்பொன்" என அழைக்கப்படும். பஞ்சலோகமாவன: பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம் என்பனவாகும்.

கலைமகள் தொல்பொருள் கலைக் கலைக்கூடத்தில் 10 பஞ்சலோகப் படிமங்கள் உள்ளன.

சிறு அளவிலான முருகன் சிலை அழகிய வடிவில் உள்ளது. குழந்தை வடிவிலான தவழும் கண்ணன் உருவம் ஒன்றும் திருமால் படிமம் ஒன்றும் உள்ளது.

நின்ற யானை மீது வைக்கப்பட்டுள்ள அழகிய 'கஜ விளக்கு' ஒன்றும் இங்கே உள்ளது. நின்ற கோலத்தில் இரண்டு அழகிய பெண்கள் படிவங்களும் உள்ளன.

ஒரு முன்காலைத் தூக்கிக் கொண்டு நிமிர்ந்த நிலையிலான ஒட்டகம் அழகிய தோற்றமுடன் சிலை வடிவில் உள்ளது, சிறு யானையின் உருவமும் உள்ளது.

பண்டைக் காலத்தில் அரண்மனையில் பயன்படுத்தப் பட்ட வாசனைப் பொருள் (சென்ட் அல்லது பன்னீர்) தெளிக்கும் அழகிய பசுஅமைப்பிலான அதிசயப் பொருள் ஒன்று உள்ளது. பசுவின் வாயிலிருந்து கொடி போல் படரும் அழகிய தெளிப்பான் நன்கு அமைக்கப்பட்டுள்ளது. பசு வாலைத் தூக்கிக் கொண்டு உள்ளக் காட்சியும், பசுவின் கீழ் கன்றுக்குட்டி பால் குடிக்கப் பாய்ந்து செல்லும் காட்சியும் சிறு அளவினதானாலும் அழகு மிளிரச் செய்யப்பட்டு உள்ளது.

பள்ளித் தொல்பொருள் கலைக் கூடத்தில் அழகிய "பல்லி" ஒன்றும் உள்ளது.

# [12] கல்வெட்டுக்கள் கூறுவன

## நன்மங்கலம் சிறக்க

எந்தச் செயலைத் தொடங்கினாலும் இறைவணக்கத்துடன், தொடங்குவது நம் நாட்டு வழக்கம். அதுபோல் கல்வெட்டுக் களைக் கல்லில் பொறிக்கத் தொடங்குவதற்கு முன் முதலில் மங்கலச் சொல் ஒன்றைத் தொடங்கிய பின் தொடங்குவது பெரும்பாலும் வழக்கமாக உள்ளது. அது காலத்திற்கும், சார்ந்துள்ள சமயத்திற்கும் ஏற்றார்போல இருக்கும்.

நமசிவாய, சுபமஸ்து, ஸ்வஸ்திஸ்ரீ, சித்தம் என்றும், உ போன்ற குறிகளுடனும் வெட்டப்பட்டிருக்கும். சில கல் வெட்டுக்கள், செப்பேடுகளும் தேவாரத்திருமுறையிலிருந்தும் திவ்வியபிரபந்தப் பாடலிலிருந்தும் ஒரு பாடலைக் கூறிய பின் தொடங்கும். இது மிகச் சில கல்வெட்டுக்களில்தான்.

பெரும்பாலும் தொடக்கம் சமஸ்கிருதச் சொல்லைக் கிரந்த எழுத்தில் வெட்டியிருப்பார்கள். பல கல்வெட்டுக்களில் முன்பு குறிப்பிட்டுள்ள 'ஸ்வஸ்திஸ்ரீ' என்றே காணப்படும்.

கொங்கு நாட்டுக் கல்வெட்டுக்கள் பலவற்றில் கிரந்த தொடருக்கு பதிலாக "நன்மங்கலஞ்சிறக்க" என்ற தொடர் வெட்டப்பட்டிருக்கும். ஒரு சில கல்வெட்டுக்களில் 'ஸ்வஸ்த' என்ற சொல்லுடனும் வேறு ஒரு சில கல்வெட்டுக்களில் ஸ்ரீ என்ற எழுத்துடனும் நன்மங்கலஞ்சிறக்க என்ற தொடர் காணப்படும்.

ஈங்கூர், பருவாச்சி, அறச்சாலூர் மூன்று இடங்களிலி ருந்து கலைமகளுக்கு வந்துள்ள கல்வெட்டில் நன்மங்கலஞ் சிறக்க என்ற தொடர் காணப்படுகிறது. இவை இப்பகுதி வாழ் மக்களின் தமிழ்ப் பற்றினைக் காட்டுகிறது.

## நானாதேசி அடைக்கலம்

கொங்கு நாடு வணிகத்தால் புகழ் பெற்றது. சங்க காலத்திலேயே ரோமானியர் இங்கு வாணிகம் செய்ய வந்தனர். ரோமானிய அரசர்களின் பொன், வெள்ளி நாணயங்கள் கொங்கு நாட்டில் ஏராளமாகக் கிடைத் துள்ளன. கிழக்குக்கடற்கரை வரை செல்ல நல்ல பெருவழிகள் கொங்கு நாட்டில் அமைக்கப்பட்டிருந்தன. கொங்குநாட்டுப் படியூரில் கிடைத்த மணிக்கற்கள் ரோமானியர்களால் பெரிதும் விரும்பப்பட்டது.

பல் வேறு வணிகக் குழுக்கள் இங்கு இருந்தன.

வளஞ்சியத்தார்
திசையாயிரவர்
திசையாயிரத்து ஐநூற்றுவர்
பெருநீரவியார்
வீரப்பெருநீரவியார்
நகரத்தார்

கலனையார்
அஞ்சுவண்ணத்தார்
நாநாதேசிகள்
பதிணெண் விஷயத்தார்

என்பன அவற்றின் பெயராகும்.

திசையாயிரத்து ஐநூற்றுவ நாநாதேசி என்பது கொங்கு நாட்டிலிருந்த ஒரு வணிகக் குழுவின் பெயர். அவர்களும் பிற வணிகப் பெருமக்களும் பாதுகாப்பாகத் தங்கியிருக்கும் பொருட்டு ஒருவன் ஒரு நகரத்தை ஏற்படுத்திக்கொடுத்தான்.

அதிருக்குறையான் என்பது நகரம் ஏற்படுத்தியவனின் இயற்பெயர். அவன் கொங்கு வேளாளர்களில் வெண்டுவன் என்ற பிரிவைச் சேர்ந்தவன். அவன் நித்த விநோதம் என்ற ஊரைச்சார்ந்தவன். அந்த நித்தவிநோதம் என்ற ஊர் கொங்கு 24நாடுகளில் கிழங்கநாடு என்ற பகுதியில்உள்ளது. இவ்வளவு செய்திகளும் அச்சிறு கல்வெட்டில் உள்ளன.

இந்தக் கல்வெட்டுக் கிடைத்த இடம் பூந்துறைநாட்டுப் பழமங்கலம் என்ற ஊரில் பழனிசாமிக் கவுண்டர் காட்டிலாகும். அக்காலக் கொங்கு நாட்டில் ஒரு உட்பிரிவு நாட்டை சார்ந்தவர்கள் அடுத்த பிரிவுக்கும் சென்று பல அறப்பணிகள் செய்திருக்கின்றனர் என்பது இதன் மூலம் தெரிகிறது.

இக்கல்வெட்டில் அரசன் பெயர் இல்லை. இக்கல்வெட்டின் எழுத்தமைதியைக் கொண்டு இது ஏறத்தாழ கி. பி. 11ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது என்று கூறலாம்.

அப்பொழுதெல்லாம் தமிழ்நாட்டின் வணிகக் குழுக்கள் சுயேச்சையாக அரசன் பெயரைக் குறிக்காமல் கல்வெட்டுப் பொறிக்கும் வழக்கத்தைக் கொண்டிருந்தனர் என்று கூறும்

கூற்றுக்கு இக்கல்வெட்டு மிகச்சிறந்த ஆதாரமாக உள்ளது இதுபோல் அரசன் பெயர் குறிக்காத பழங்கல்வெட்டுவணிகர் குழுவைச் சேர்ந்தது —சேலம் மாவட்டம் மாறமங்கலத்தில் உள்ளது.

இக்கல்வெட்டில் வணிகக்குழுவிற்கு ஏற்படுத்திய நகரத்திற்கு 'அடைக்கலம்' இதுபோன்ற வேறு பாதுகாப்பு இடங்கள் 'அபயம்' 'அஞ்சினான் புகலிடம்' என்ற பெயரைப் பெற்றுள்ளது. பிறரைக் கண்டு அஞ்சியவர்களும் இங்கு தங்கலாம், தங்கள் பொருள்களுக்கு இயல்பாகவே பாதுகாவல் வேண்டும் என எண்ணுபவர்களும் இங்கு தங்கலாம்.

பழமங்கலத்தில் அடைக்கலம் ஏற்படுத்திய அதிருக்குறையான் 'நித்த வினோதம்' என்ற ஊரைச்சார்ந்தவன். நித்த வினோதன் என்பது முதலாம் இராசராசனின் [985-1014] பட்டப் பெயர்களில் ஒன்று. இவ்வூர் இராசராசனின்பெயரால் அமைந்ததாக இருக்கலாம்.

இராசராசனுக்கும் கொங்கு நாட்டுக்கும் மிக நெருங்கிய தொடர்பு உண்டு. கொங்கு நாட்டின் மிகப் பெரிய பழமையான நகரம் கொங்கு. (கொங்கூர்) அதுதான் கங்கர்கள் ஆட்சிக் காலத்தில் ஸ்கந்தபுரம் என்று பெயரைப் பெற்றது. (கொங்கு-மணம்-ஸ்கந்தம்) சேரர்கள் அதற்குப் பெருவஞ்சி என்று பெயரிட்டனர். இராசராசனுக்கும் முன் அவ்வூர் பராந்தகபுரம் என்று அழைக்கப்பட்டது. இராசராசன் காலத்தில் வரலாற்றுப் புகழுடைய அப்பேரூர்க்கு இராசராசபுரம் என்று பெயரிடப்பெற்றது. பிற்காலத்தில் அவ்வூர் இராராபுரம் என்று மருவி இன்று தாராபுரம் ஆகிவிட்டது. (பாண்டிய நாட்டில் இராசராசபுரம் ராதாபுரம் என்றும் சோழ நாட்டில் இராசராசபுரம் தாராசுரம் எனறும் பிற்காலத்தில் மருவியது கவனிக்கத் தக்கது.)

இராசராசபுரம் மட்டுமல்ல சிங்களாந்தகபுரம், மும்முடிச் சோழபுரம், சனநாதச் சதுர்வேதிமங்கலம், சோழசிராமணி என்ற ஊர்களும் கொங்கு நாட்டில் இராசராசன் பெயரால் ஏற்பட்டவைதாம். அதுபோலவே இராசராசனின் பட்டப் பெயர்களில் ஒன்றான நித்த விநோதன் (நாள்தோறும் புதுமை செய்பவன், புதுமையை விரும்புபவன்) என்ற பெயரால் கொங்கு நாட்டின் ஒரு பிரிவான கிழங்கு நாட்டில் ஏற்பட்டது சிறப்பான செய்தியாகும்.

நித்தவினோதன் என்ற பெயரில் தமிழ்நாட்டில் பல ஊர்கள் ஏற்பட்டன. நாடுகள் அமைந்திருந்தன. பல அரசியல் தலைவர்களும் அந்தப் பெயரைப் பெற்றிருந்தனர்.

நித்த வினோதச் சேரி என்பது ஊர்ப்பெயர். நித்த வினோத வளநாடு என்பது நாட்டின் பெயர். தூர்ப்பில் நித்தவினோதப் பிரமராயன், குணவன் மதுராந்தகனான நித்த வினோத பெருந்தச்சன், நித்தவினோத மாராயன், அரையன், ராசாசிரயன், ஆன நித்த வினோத வேதமாராயன், நித்த வினோத விழுப்பேரரையன் என்பன சில அலுவலர்கள் பெயர்.

இந்தக் கல்வெட்டின் பின்புறம் பல சின்னங்கள் பொறிக்கப்பட்டிருக்கின்றன.

குத்துவிளக்கு
சந்திரன்
சாமரம்
சங்கு
பூரணகும்பம்
பசும்பை
வில்

அம்பு
கட்டாரி
அரிவாள்
கடகம்
கலப்பை
குதிரை
திரிசூலம்
யோகதண்டு
கோடரி
ஈட்டி
கைவாள்

போன்ற பல உருவங்கள் பொறிக்கப் பட்டிருக்கின்றன. அறிஞர்கள் இவ்வளவு மிகுதியான சின்னங்கள் பொறிக்கப் பட்டிருப்பது சிறப்பானது என்று கூறுகிறார்கள். ஆனால் இது பற்றிப் பல கருத்து வேறுபாடுகள் இருக்கின்றன.

சிலர் 18 வகையான வணிகக் குழுவின் சின்னங்கள் என்று கூறுகின்றனர். சிலர் இதில் கலப்பை (சித்திரமேழி) இருக்கின்ற காரணத்தால் உழவர், வணிகர் குழுவின் ஒருமைப்பாட்டைக் குறிக்கின்றது என்று கூறுகின்றார்கள். சிலர் இவை வணிகர் சின்னம்தான். இங்குள்ள போர்க் கருவிகள் அவர்கள் பாதுகாப்புக்குப் பயன்படுத்தியது என்று கூறுகிறார்கள்.

இதில் உள்ள 18 சின்னங்களையும் 18 வகையான மங்கலங்கள் என்றும் கொள்ளலாம். இந்த ஊர் 18 வகையான மங்கலங்களையும் பெற்றுப் பொலிவதாக என்ற கருத்தில் திரிசூலத்தை நிறுத்தி அதைச் சுற்றிலும் அவை வைக்கப்பட்டுள்ளன என்று கூறுவாரும் உண்டு.

சென்னை எழும்பூர் தொல் பொருள் கலைக் கூடத்தில் அமராவதி–ஜக்கய்ய பேட்டைச் சிற்பமொன்றில் அரசனைச் சுற்றிலும் இதனை ஒத்த மங்கலப் பொருட்கள் பொறிக்கப் பட்டுள்ளது ஒப்புநோக்கத் தக்கது.

## தாழி ஏரி

கொங்கு நாடு தனி நாடு என்றாலும் அடிக்கடி சேரர் கள் தலையிட்டு ஆதிக்கம் செலுத்தினர். 8, 9 ஆம் நூற்றாண்டுகளிலும் 10 ஆம் நூற்றாண்டின் இடைக்காலம் வரையிலும் ஒரு சில காலங்களில் சேரர் ஆதிக்கம் ஏற்பட்டது. கோக்கண்டன் ரவி; ரவி கண்டன்; கோதை ரவி; இரவி கோதை முதலிய சேர அரசர்கள் கொங்கு நாட் டில் ஆதிக்கம் செலுத்தினர்.

இரவி கோதை கருர்ச் சித்திரா கூடத்தில் இருந்து அரசு புரிந்ததாக ஈரோட்டுச் செப்பேடு கூறுகிறது. காவேரி வல்ல வன் என்ற பெயரையும் பெற்றான். நந்திகிரி நாதன் என்பது அவனுக்குள்ள மற்றொரு பட்டப்பெயர்.

இந்த இரவிகோதையின் கல்வெட்டு ஈரோடு சிவன் கோயிலில் உள்ளது. ஈரோட்டை அடுத்த கொல்லம்பாளை யத்தில்ஏரிக்கரையில் ஒரு கல்வெட்டுக் கிடைத்தது. அதுமிக முக்கியமான கல்வெட்டு. சக ஆண்டு குறிக்கும் கல்வெட்டு. கி.பி. 948 ஆம் ஆண்டைச் சேர்ந்தது. முழுவதும் தமிழில் வெட்டப்பட்டுள்ளது.

இக் கோ ரவி கோதை முதலாம் பராந்தகனது மாமனார் என்பது ஆய்வாளர் கண்ட உண்மை. மதுரை கொண்ட முதல் பராந்தகன் கல்வெட்டு ஈரோடு பள்ளி கொண்டருளிய பெருமாள் கோயிலில் உள்ளது. ஓரே ஊரில் மாமனார் கல்

வெட்டும் மருமகன் கல்வெட்டும் உள்ளது மிக வரலாற்று புகழ் பெற்றதாகும்.

கொங்கு நாட்டை ஆண்ட இக்கோ ரவிக்கோதைக்கு மூன்று பெண்கள் அவர்களுக்கு முறையே கோக்கிழானடிகள், ரவி நீலி, கோதைப் பிராட்டி என்பன பெயர்கள். தந்தையின் பெயரை மூன்று பெண்களும் வைத்துக் கொண்டனர். இது அக்காலத்திய பெயர் வைக்கும் முறையாகும்.

அரசர்கள் காடு கொன்று நாடாக்கிக் குளம் தொட்டு வளம் பெருக்கினர். நீரும் நிலமும் ஒன்றுபட இயைபு படுத்தியவர்களே இவ்வுலகில் புகழ் பெறுகின்றவர்கள் என்பது சங்கச் சான்றோர் கருத்து. இதற்கேற்ப கோ ரவிக்கோதையின் காலத்தில் ஈரோட்டில் ஒரு ஏரி வெட்டப்பட்டது. ஈரோட்டில் வாழும் வேளாளர்கள் உதவியுடன் ஈரோட்டில் இப்போது வாழ்கின்றவர்களுக்கும், ஏற்கனவே குடிபெயர்ந்து போனவர்களுக்கும், இனிமேல் குடிபுகுகின்றவர்களுக்கும் பயன்படும் வண்ணம் தென்னவன் பேரரையனாயின வஞ்சி வேள் தாழி என்பவன் வெட்டி வைத்தான்.

இக்குளத்தின் பராமரிப்புக்காகப் பத்துக் கழஞ்சு பொன் மூலப் பொருளாக வைத்து அதற்கு ஆண்டுதோறும் வரும் பத்துக் கல நெல் வட்டியைக் கொண்டு இக்குளத்தைப் பராமரித்தனர்.

இக்குளத்திற்குத் 'தாழி ஏரி' என்று பெயர் இட்டனர். இந்த ஏரியின் அமைப்பை நாம் இன்றைக்கும் பார்க்க முடியும் என்றாலும் ஏரி அழிந்து விட்டது.

காலிங்கராயன் கால்வாய் வரும்வரை இந்த ஏரி பயன் படுத்தப்பட்டு வந்தது. காலிங்கராயன் கால்வாய் வந்த பின் ஏரி பயனற்று அழிந்துவிட்டது.

இக்கல்வெட்டில் பழைய இலக்கண மரபு ஒன்றைக் காணுகின்றோம். பழங்காலத்தில் எ, ஒ என்று எழுதினால் அது ஏ, ஓ என்பதைத்தான் குறிக்கும். அது ஏ, ஓஎன்று எழுதினால் மட்டுமே அது எ, ஒ என்பதைக்குறிக்கும். இதனைத் தொல்காப்பியம்

"மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்
எகர ஒகரத்து இயற்கையும் அற்றே"

என்று கூறுகிறது.

தென்னவன் என்று பழைய முறைப்படி எழுதினால் அது தேன்னவன் என்றாகிவிடும். அதற்காக "தென்னவன்" என்று புள்ளி பெற்று எழுதும் பண்டைய முறையை இங்கு காணுகின்றோம்.

அருகில் உள்ள அறச்சலூர்க் கல்வெட்டில் இம்முறை பயன்படுத்தப்படுகிறது. எழுத்தும் புணர்த்தான் என்ற தொடரில் ஏ உட்பெறு புள்ளி பெற்ற வடிவில் எழுதப் பெற்றுள்ளது.

## வீரபட்டணக் கல்

விசயாலய சோழன் முதற்கொண்டு சோழ நாட்டில் ஆட்சிபுரிந்த பிற்காலச் சோழ மரபு கி. பி. 1067முதல் 1070 முடிய ஆட்சிபுரிந்த அதிராசேந்திர சோழனுடன் முற்றுப் பெற்றது.

அவனுக்குப் பின் முதலாம் இராசேந்திர சோழனின் மகள் (அம்மங்கைதேவி) வயிற்றுப்பேரனும் கீழைச் சளுக்கிய நாட்டு மன்னன் இராசராச நரேந்திரம் மகனுமாகிய முதல் குலோத்துங்க சோழன் சோழநாட்டு அரசனானான்.

கீழைச் சளுக்கிய மரபுப்படி முதல் குலோத்துங்கனுக்கு விஷ்ணுவர்த்தனன் என்று பெயரிடப் பெற்றிருந்தது. வேங்கி நாட்டில் கிடைத்த இவன் கல்வெட்டுக்கள் மூலம் இப் பெயரை அறிகின்றோம்.

குலோத்துங்கன் தன் தாய் மாமனாகிய இரண்டாம் இராசேந்திரன் மனையில் பிறந்ததாலும், தாய் வழிப் பாட்டனாகிய முதலாம் இராசேந்திரசோழன் இவன் பிறப்பதற்கு முன்பே இறந்ததாலும், அக்காலத்தே கீழைச் சளுக்கிய மரபைக் காட்டிலும் பல்வேறு வகைகளில் சோழ மரபே சிறந்திருந்ததாலும் விஷ்ணுவர்த்தனன் என்றபெயர் இராசேந்திரன் என்று மாற்றி வைக்கப்பட்டது.

பாட்டனின் பெயரைப் பேரன் வைத்துக் கொள்வது பெரும்பாலும் பண்டைக்காலத்தில் வழக்கமாக இருந்தது. (பெயரை உடையவன் – பெயரன் - பேரன்)

குலோத்துங்க சோழனின் நான்காம் ஆட்சியாண்டு வரை அவனுக்கு இராசேந்திரன் என்ற பெயரே கல்வெட்டுக்களில் பொறிக்கப்பட்டது. சோழர்கள் மாறிப் புனைந்து கொள்ளுகிற இராச கேசரி, பரகேசரி என்ற பட்டப் பெயர்களில் இராசகேசரி என்ற பட்டம் பெற்று (குலோத்துங்கன்) இராசகேசரி இராசேந்திரன் ஆனான்.

இராசகேசரி இராசேந்திரன் என்பது முதல் குலோத்துங்க சோழனின் நான்காம் ஆண்டு வரை நிலவிய பெயர். இராசகேசரி பட்டம் பெற்றஇராசேந்திரன் குலோத்துங்கன் ஒருவனைத் தவிர வேறுஎவரும் இல்லை.

தமிழகத்திலும் தமிழகத்திற்கு வெளியேயும் இராசகேசரி இராசேந்திரன் என்று பெயர் பொறித்த கல்வெட்டுக்கள் மிகச் சிலவே கிடைக்கின்றன. ஐந்தாம் ஆண்டுக் கல்

வெட்டுக்களிலிருந்துதான் குலோத்துங்கன் என்ற பெயர் வழங்குவதைக் காணுகின்றோம்.

கி. பி. 1070 ஆம் ஆண்டு ஜூன் மாதம் 9ஆம் நாளில் சோழநாட்டு உரிமையைப் பெற்ற இராசகேசரி இராசேந்திரனின் (முதலாம் குலோத்துங்கன்) நான்காம் ஆட்சியாண்டு குறித்த மிக அரிய கல்வெட்டு ஒன்று கலைமகள் கலைக்கூடத்தில் உள்ளது. பவானி வட்டம் வேம்பத்தி என்னும் கிராமத்தில் உள்ள வேட்டுவன் தோட்டத்திலிருந்து இக்கல் கொண்டு வரப்பட்டுள்ளது.

குலோத்துங்கன் பட்டம் ஏற்றநிகழ்ச்சி குறித்து அறிஞர் சிலரிடையே ஐயப்பாடுகள் சிலஉண்டு. எப்படியும் நன்னெறியில் ஆட்சி புரிந்து சோழர் குலப்பெயரை நிறுவிப் பேரரசைக் கட்டிக் காத்தான் என்பதில் கருத்து வேறுபாடு கிடையாது.

இராசராசன் காலத்துக்குப்பின் குலோத்துங்கன் காலத்தில் நாடெல்லாம் அளக்கப்பட்டு விளைநிலத்திற்கு மாத்திரம் வரி விதிக்கப் பட்டது. அதனால் குலோத்துங்கன் உழவர்களிடம் நற்பெயர் பெற்றான்.

சோழ நாட்டிலிருந்து ஏற்றுமதியாகும் பொருள்களுக்கும், இறக்குமதியாகும் பொருள்களுக்கும் "உல்கு" எனப்படும் சுங்கம் வசூலிக்கப்பட்டது. இது வணிகர்களுக்கு இடையூறு விளைவித்திருக்க வேண்டும். அல்லது ஏதோ ஒரு காரணத்திற்காகக் குலோத்துங்கன் அச்சுங்கவரியை நீக்கினான். கல்வெட்டுக்கள் இச்செயலைப் பெரிதாகப் பாராட்டுகின்றன. "சுங்கந் தவிர்த் தருளிய சோழன்" என்று குலோத்துங்கன் அழைக்கப்பட்டான்.

கவிச்சக்கரவர்த்தி ஒட்டக் கூத்தரும் தாம் பாடிய மூவருலாவில்,

'புவிராசராசர் மனுமுதலோர் நாளில்
தவிராத சுங்கம் தவிர்த்தோன்'

என்று பாடுகின்றார். பிற்காலத்திய சோழ அரசர் தம் மெய்க் கீர்த்தியில் கூட ''சுங்கமில்லாச் சோணாடு'' என்று இச் செயல் குறிக்கப்படுகிறது.

எனவே வணிகர்கள் குலோத்துங்கன் மீது மிகுந்த மரியாதை வைத்திருந்தனர். குலோத்துங்கனின் தொடக்க காலக் கல்வெட்டுக்களில் வணிகர்களும், வணிகக் குழுக் களும் மிக இன்றியமையாத இடத்தைப் பெறுகின்றனர். இந்த வகையில் கலைமகள் கலைக்கூடத்தில் உள்ள குலோத்துங்கன் கல்வெட்டும் வணிகர் குழுவைப் பற்றிய தாகவே உள்ளது குறிப்பிடத்தக்கது. முதலாம் குலோத்துங்க சோழனைப் பற்றிய ஆய்விற்கும், பிற்காலச் சோழர் பற்றிய ஆய்விற்கும் இந்தக் கல்வெட்டு மிகமிக இன்றியமையாதது.

சையமுரி நாடாழ்வார் நாட்டில் உள்ள வடகரை விக்ரம பல்லவபுரத்தில் உள்ள வளஞ்சிரிகர் என்னும் வணிகர் களுக்குப் பாதுகாப்பாக வீரபட்டணம் செய்து கொடுத் தமையை இக்கல்வெட்டுக் குறிக்கிறது.

வீரப் பெரு நீரவியார் என்ற வணிகக் குழுவைச் சேர்ந்த பலர் இப்பட்டணத்தை அமைப்பதில் உதவினர். அவர்களில் சிலர் வருமாறு:

1. நாடாழ்வாரை வெட்டின மதுரை இருக்கும் பிராந்தக தேவன் நான் கொரு மண்டலம் உய்யக் கொண்டான்.

2. தொண்டை நாட்டில் தூரலூர் இருந்து வாழ் குறவனை வெட்டினான்.

3. பாண்டிய நாட்டில் கல்லக நாட்டு கோதை சோலை யான் படை நாயகனை வெட்டினான்.

4. முசிறியான மும்முடிச் சோழபுரத்தில் தந்திர சோழ முத்தரையனை வெட்டினான்.

5. பருத்திப் பள்ளி நீர்ந்த ராஜேந்திர சோழப் பெருநீர வீர மாணிக்கச் செட்டி

6. சேந்தன் திருக்குர வாழ் நானா தேசியக் கவரை விடங்கஞ் சாத்தான் பாலையான்

7. திசையாயிரத்து ஐஞ்ஞூற்றுவப் பிள்ளை கண்டழியும் அரையம் மாயிலட்டியான்

8. சிங்கழூரனான அஞ்ஞூற்றுவ வேளான்

9. அஞ்சுகரை நாட்டுக் கவரை விடங்கன்

ஆகியோர் வீரப்பட்டணம் செய்தனர் என்று வேம்பத்திக் கல் கூறுகிறது. இவர்களுக்கு வலங்கைமார், கவரைகளமார், வீரகளமார் என்று வேறு பெயர்கள் உள்ளன. அவர்கள் வத்துமாலையும், வாடாப் பூவும், வத்து மாலையும், முனிவர் சிங்காதனமும் உடையவர்கள்.

குலோத்துங்கனின் இரண்டாம் ஆட்சியாண்டில் சோழ நாட்டில் ஒரு பெருங் கலவரம் நிகழ்ந்தது. அக்கலவரத்தில் வணிகர்கள் முக்கிய இடத்தைப் பெற்றனர். முன்பு கூறியது போலக் குலோத்துங்கனின் தொடக்க காலக் கல்வெட்டுக் களில் வணிகர் சிறப்பிடம் பெறுகின்றனர். படையினர்க்கும் வணிகர்கட்கும் நெருங்கிய தொடர்பு இருந்தது.

ஒரு கல்வெட்டில் மகாதந்திரத்தார் என்ற பெரும் படையினர் வளஞ்சியர் என்ற வணிகக் குழுவினரைத் தங்கள் முன்னோர்கள் என்று கூறிக் கொள்கின்றனர். கொங்கு நாட்டில் பல இடங்களில் வளஞ்சியர் வாழ்ந்திருக்கின்றனர்.

வீரப் பெருநீரவியார் என்பது ஒரு வணிகக் குழுவின் பெயர். இராசிபுரம் பொன் வரதராசப் பெருமாள் கோயிலில்

உள்ள சகலகுலம் (வாழ) வைத்த இராசராசன் கல்வெட்டில் வீர பெத நீரவியார் என்ற பெயரைக் காணுகின்றோம். பெரு என்ற சொல் அங்கு பெத என்று தெலுங்கு மொழிச் சொல் லால் எழுதப்பட்டுள்ளது.

சேலம் மாவட்டத்துப் பருத்திப் பள்ளியில் ராசேந்திர சோழப் பெருநீரவியார் என்ற ஒரு வணிகக் குழு இருந்தமை இக்கல்வெட்டு மூலம் தெரிய வருகிறது.

தனியுரிமை பெற்று ஆண்ட கொங்குச் சோழரின் ஆளுகைப் பகுதிக்குள் கிடைக்கும் ஒரு சில பேரரசுச் சோழர் தம் கல்வெட்டுக்களுக்குள் இதுவும் ஒன்று. புதிதாக நாட்டை ஆளுகைக்குள் கொண்டுவந்த முதல் குலோத்துங் கன் எல்லாப் பகுதிகளிலும் தன் பெயர் பொறித்த கல் வெட்டுக்கள் இருப்பதை விரும்பி இருக்கக்கூடும். காவிரிக்கு மேற்கே அமைந்த கொங்குச் சோழர் ஆளுகைப் பகுதியில் கிடைக்கும் குலோத்துங்கன் கல்வெட்டு இது ஒன்றேயாகும்.

## கிழங்க நாடு

கொங்கு 24 நாடுகளில் ஒன்று கிழங்கு நாடு அல்லது கிழங்க நாடு என்று பெயர் பெற்றது. இது கரூர் தாலுக்கா வின் ஒரு பகுதியும் குளித்தலையின் ஒரு பகுதியும் உள்ள காவிரிக்கரை ஓரமுள்ள பகுதியாகும்.

ஏன் அந்த நாடு கிழங்க நாடு என்று பெயர் பெற்றது! கோவை கிழார் சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார் அவர் கள் இது குறித்துச் சில கருத்துக்களைக் கூறுகின்றார்.

'கீழ் கொங்கு நாடு' என்ற பெயர் நாளடைவில் கிழங்க நாடு ஆகியிருக்க வேண்டும் என்றும், அல்லது 'கீழ் அங்க நாடு' கிழங்க நாடு ஆக மாறியிருக்குமா? என்றும் ஐயப்படு

கின்றார். இரண்டையும் துணிந்து கூற அவரால் இயல வில்லை.

மேல் கொங்கு, தென் கொங்கு, வட கொங்கு என்ற வழக்கு கல்வெட்டிலும், இலக்கிய வழக்கிலும் உள்ளன. அதற்கு மாறாகக் 'கீழ் கொங்கு' என்ற வழக்கு எங்கும் பயின்று வரவில்லை. காவிரிக்குக் கீழ்ப்பகுதியை "மழகொங்கம்" என்றே அழைக்கின்றனர்.

"பூவிரியும் பொழிற்சோலைக்
காவிரியைக் கடந்திட்டு
மழகொங்கம் அடிப்படுத்து"

என்பது

செப்பேட்டுப் பகுதியாகும். எனவே கீழ் கொங்குநாடு கிழங்கு நாடு ஆயிற்று என்ற கருத்துப் பொருந்துமாறு இல்லை.

இனிக் கீழ் அங்க நாடு – கிழங்கு நாடு ஆயிற்று என்று அறிஞர் எண்ணியதை ஆராய்வோம்.

'கீழ் அங்க நாடு' என்ற ஒரு பகுதி உண்டு எனக் கொண்டால் மேல் அங்க நாட்டை எங்கே தேடிக் காண்பது. அங்க நாடு என்ற பெயர் கொங்கு நாட்டில் எங்கும் - எப்பொழுதும் இருந்தது இல்லை.

அப்படியானால் கிழங்க நாடு என்ற பெயர் எப்படி ஏற்பட்டது. ஆராய்ச்சி அறிஞர் உலகில் எழும் இவ்வினாவிற்குக் கலைமகள் கல்வி நிலையத் தொல்பொருள் கலைக் கூடத்தில் உள்ள கல்வெட்டொன்று நல்ல விடையை நமக்குக் கூறுகிறது.

சிவகிரி நத்தக்காட்டிலிருந்து கலைமகளுக்கு வந்துள்ள நடுகல்லில் காணப்படும் தலைவன் "கிழங்க வேட்டுவரில் கிழங்கன் பெரிய கிழங்கன்" என்பவனாகும்.

இந்த வேட்டுவர் குலத் தலைவன் பெயர் பெரிய கிழங்கன், அவன் கிழங்க வேட்டுவர் பிரிவைச் சேர்ந்தவனாக இருக்கலாம். கல்வெட்டின் அமைப்பிலிருந்து அவன் கிழங்கன் என்பானின் மகனாக இருக்கலாம்.

வேட்டுவர்கள் கொங்கு நாட்டுக்குரிய குடிமக்கள். அவர்களில் ஒரு பிரிவினரான கிழங்க வேட்டுவர் பெயரில் கொங்கு நாட்டின் ஒரு பகுதி கிழங்க நாடு என்று பெயரைப் பெற்றிருக்க வேண்டும். இத்தகு சிறந்த தகவலைக் கலைமகள் நடுகல் ஒன்று கூறுகிறது.

இது கொங்கு நாட்டு வரலாற்றில் ஒரு புதிய சிறந்த வரலாற்றுச் செய்தியாகும்.

## குறும்பர் திருப்பணி

கொங்கு நாட்டுக்கு வடக்கே ஹளேபீடுவைத் தலைநகராகக் கொண்ட ஒய்சள வம்சம் (போசளர்) தோன்றியது. கொங்கு நாட்டின் தென் எல்லையில் மதுரைப் பாண்டியர் புகுந்து ஆட்சி செய்தபோதே கொங்கு நாட்டின் வடக்குப் பகுதியில் ஒய்சளர் புகுந்து தொல்லை விளைவித்தனர். ஏறத்தாழ 1189 முதல்– 1342 வரை கொங்கு நாட்டில் பல பகுதிகள் ஒய்சளர் ஆதிக்கத்தில் இருந்தது.

மதுரையில் 14 ஆம் நூற்றாண்டில் சுல்தான்கள் ஆட்சி ஏற்பட்டுத் தமிழகத்தின் ஒரு பகுதி இசுலாமியர் ஆதிக்கத்தில் இருந்தபோது கொங்கு நாடு முழுவதும் ஒய்சளரின் கீழ் இருந்தது.

ஒய்சள வீரசோமேசுவரன் (1254) ஆட்சிக் காலத்தில் அவன் தம்பி வீரராம நாதனும், அவன் தம்பி வீர விசுவ நாதனும் திருச்சிக்கு அருகில் உள்ள கண்ணபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தனர். (இன்றைய சமயபுரம்)

இவர்கள் கல்வெட்டெல்லாம் கொங்கு நாட்டில் கிடைத்தாலும், ஒய்சள மூன்றாம் வீரவல்லாளன் கல்வெட்டே பெரும்பாலும் கிடைக்கிறது.

அந்தியூர், எண்ணமங்கலம், விசயமங்கலம், ஈரோடு, அறச்சலூர், பட்டில், கொடுமணல் போன்ற ஊர்களில் வீர வல்லாளன் கல்வெட்டுக்கள் கிடைக்கின்றன. அவை பெரும்பாலும் கோயில் திருப்பணிகளாகவே இருக்கின்றன.

பவானி வட்டம் எண்ணமங்கலம் புங்கமடுவு வாவித் தோட்டத்திலிருந்து கலைமகள் கலைக் கூடத்திற்குக் கிடைத்த கல், வீரவல்லாள தேவர் காலத்துக் கல்வெட்டு.

வீரவல்லாள தேவனின் ஏழாம் ஆட்சியாண்டில் (கி. பி 1299) வடகரை நாட்டுச் சிலம்பூரில் பந்தீசுவர முடையார் கோயில் மிகவும் பழுதாகக் கிடந்தது.

அக்கோயிலைப் பழுதுபார்த்து இறைவன் திருமேனி களைப் பிரதிட்டையும் செய்வித்தனர் சில அடியார்கள். நிலமும் மானியமாகக் கொடுத்தனர்.

அவ்வாறு செய்தவர்கள் இவ்வூர்க் காணியுடைய குறும்பர்கள். சிலர் சாட்சிக் கையொப்பமிட்டிருக்கின்றனர். சிலம்ப கவுண்டன், இவி பந்தன், இராசாக் கவுண்டன், சொன்ன கவுண்டன், பெரியப்பன் குப்பன், காரிராமன், இராம கவுண்டன்முதலியோர் ஆவர்.

இக்கல்வெட்டை எழுதியவன், நடுவிக் கவுண்டன் பந்தியப்பன். இக்கல்வெட்டில் எண்ண மங்கலத்தின் பெயர் சிலம்பூர் என்று குறிக்கப்படுகிறது. அதற்கேற்ப சிலம்ப கவுண்டன் என்ற பெயரும், இறைவன் பெயர் பந்தீசுவரர் என்பதற்கு ஏற்ப பந்தியப்பன் என்ற பெயரும் வருவது பொருத்தமுடையதாகக் காணப்படுகிறது.

இக்கல்வெட்டு 108 வரிகளில் அமைந்திருப்பது அக்கால மக்களின் சமய நம்பிக்கையைக் காட்டுகிறது.

இத்திருப்பணி செய்த குறும்பர்கள் யார்? இன்று அந்தியூருக்கு வடக்கே உள்ள பருகூர் மலைத் தொடரில் 'குறும்பர்கள்' என்ற மலைவாழ் மக்கள் வாழ்கின்றனர். திருந்தாத பழங்கன்னட மொழி பேசுகின்றனர். சிலர் கொச்சையான தமிழும் பேசுகின்றனர். இன்று இவர்களில் பால் குறும்பர், முள் குறும்பர் என்ற பிரிவு காணப்படுகிறது.

குறும்பர்கள் கொங்கு நாட்டின் பழங்குடி மக்களில் ஒரு இனத்தார். கொங்கு 24 நாடுகளில் குறும்பர்கள் வசித்த நாடே குறும்பர் நாடு-குறும்பு நாடு-குறுப்பு நாடு ஆயிற்று என்பர்.

இவர்களில் புல்வரிக் குறும்பர், பண்றியாண்டிக்குறும்பர், ஜோசிக்குறும்பர்,கழைமரக்குறும்பர் என்ற நான்குஇனத்தார்களை உ. வே. சாமிநாதஅய்யர் குறிக்கின்றார்.

மானிடவியல் அறிஞர் திரு பிலோஇருதயநாத்அவர்கள் முன் குறும்பர், ஊராளிக்குறும்பர், தேன்குறிம்பர், வெட்டுக் குறும்பர் என்ற வகையினரைக் குறிக்கின்றார்.

ஒரு காலத்தில் சமய நம்பிக்கையுடன், சமநிலத்தில் வாழ்ந்து கோயில் திருப்பணி செய்து, இறைவன் திருமேனிகளை பிரதிட்டை செய்து கொடையாக நிலங்களையும் அளித்த குறும்பர்கள் இன்று மீண்டும் மலைவாழ் மக்களாகப் பழங்குடிகளாக மாறிவிட்டது வியப்புக்குரிய நிகழ்ச்சியாகும்.

கொங்கு நாட்டில் சில மன்னர்களும் சிலஅரசியல் தலைவர்களும் சூழ்நிலை காரணமாக முறை தவறி நடந்திருக்கலாம். ஆகையால் —

"கொடுங் கோல் மன்னன் வாழும் நாட்டினும்
கடும்புலி வாழும் காடு நன்றே"

என்ற கருத்துப்படி அவர்கள் மலைப்பகுதிக்குச் சென்றிருக்கலாம் என்று சிலர் கருதுகின்றனர். இக்கருத்து ஆய்வுக்குரியது.

## சோழர் தலைவன்

சோழர் காலத்தில் பல அரசியல் தலைவர்கள் இருந்தனர். அவர்கள் அவ்வக் காலத்திற்கு ஏற்ப அரசன் பெயரையும் சோழர்களின் பொதுப் பெயரையும் கொண்டு விளங்கினர்.

ஈரோட்டில் காரைவாய்க்கால் அருகே ஒரு வீட்டின் வாயிற்படிக்கு கீழ் சாக்கடையில் இந்தத் துண்டுக் கல் வெட்டுக் கிடைத்தது.

காலிங்கராயன் கால்வாய்க்கு அருகில் கிடைத்ததால் இது காலிங்கராயனோடு தொடர்பு கொண்டிருக்குமோ என்று எண்ணத் தூண்டுகிறது.

'வருபுனலும் வைத்த கல்' என்பது ஒரு சிறந்த தொடராக உள்ளது. 'வருபுனல்' திருக்குறளில் பயின்றுவரும் ஒருதொடர். 'வைத்த கல்' என்பது மதகு அமைத்த கல்லைக் குறிக்கலாம்.

கண்டம்பிடாரியான் என்பது அவனது இயற்பெயர் போலும். செம்பியன் என்பது அரசன் அந்தத் தலைவனுக்குக் கொடுத்த பட்டப் பெயர் ஆகலாம்.

இது கல்வெட்டின் ஒரு சிறு பகுதியாக இருந்தாலும் பொதுப்பணியைக் குறிக்கும் கல்வெட்டு என்பதால் இது மிக முக்கியத்துவம் பெறுகிறது.

இதன் எழுத்தமைதி கொண்டு கி. பி. 12 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாக கருதலாம். "கல்மேல் எழுத்துப்போல்

காணுமே' என்பதற்கு ஏற்ப எழுத்து நன்கு ஆழமாக வெட்டப்பட்டுள்ளது.

## கீழிருந்து மேல்

பல இடங்களில் கல்வெட்டுக்களை வெட்டுபவர் பெயர் குறிக்கப் பெறுவது இல்லை. மிகச் சில இடங்களிலேயே அவை வெட்டப்பட்டிருக்கும். ஈரோட்டுக் கல்வெட்டு ஒன்றில் எழுமாத்தூர் எழுத்துத் தச்சன் என்பான் குறிக்கப் பெறுகின்றான்.

இராசராசனின் தஞ்சை கல்வெட்டுக்கள் சிறந்த முறையில் எழுதப்பட்டவை. அவைகளைக் கல்லில் பொறித்தவன் சிறந்த சிற்பியாகத்தான் இருக்க வேண்டும்.

சில இடங்களில் இச்சிற்பிகள் கொடிபோலவும், மலர்கள் போலவும் எழுத்துக்களை அழகாக அலங்காரமாக வெட்டி வைத்துள்ளனர். இவை வெட்டிய சிற்பிகளின் மனப்போக்கையும் அவர்களின் புதுமை காண விரும்பும் தன்மையையும் குறிக்கிறது.

கரூரில் ஒரு கல்வெட்டு சுருள்வளையம் போலச் சுற்றி வருகிறது.

கலைமகள் தொல்பொருள் கலைக்கூடத்தில் மிக அதிசயமான கல்வெட்டு ஒன்று உள்ளது. அது பெரியார் மாவட்டம் ஈரோடு வட்டம் அறச்சலூரில் அறச்சாலையம்மன் கோயிலில் ஒரு வாயிற்படியில் ஒரு படியாகக்கட்டப் பட்டிருந்தது. இதனை அன்புடன் கொட்டாரத் தோட்டம் ஓ. எஸ். துரைசாமிக்கவுண்டர் எம். எல். சி. அவர்களும், அவர்கள் துணைவியாரும் அளித்தனர்.

அந்தக் கல்வெட்டை வெட்டிய சிற்பி ஒரு புதுமை காண விரும்பும் நோக்கத்துடன்,

"..........லவராயன் கண்ட தன்மம் நன்மங்கலஞ் சிறங்க வீர... ..........."

என்ற தொடரைக் கீழ் வருமாறு வெட்டியுள்ளான்.

..........
க வீ ர
ஞ் சி ற க்
ங் க ல
ந ன் ம
ன் ம ம்
ண் ட த
ய ன் க
ல வ ரா
.........

எழுத்தமைதி கொண்டு பார்க்கும் போது இக்கல்வெட்டு கி. பி. 14 ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகத் தெரிகிறது. எனவே வீரவல்லாளன் காலத்தைச் சார்ந்ததாக இருக்கலாம்.

இதில் தருமம் செய்த தலைவன் பல்லவராயன் ஆக இருக்கலாம்.சிவந்தான் பல்லவராயன் என்ற வேட்டுவர்குலத் தலைவன் ஒருவன் அறச்சலூர்ப் புற்றிடங்கொண்டீசுரர் கல்வெட்டில் குறிக்கப்படுகின்றான் அவனே இந்த அறச் செயலை செய்தவனாக இருக்கலாம்.

இது போன்ற கல்வெட்டுகள் ஒய்சளர் காலத்தில் சில இடங்களில்தான் வெட்டப்பட்டனவாம். தமிழகத்தில் ஒரு சில இடங்களிலும் ஆந்திர மாநிலத்தில் மிகச்சில இடங்களி

லும்தான் இப்படிப்பட்ட கல்வெட்டுக்கள் இருக்கின்றனவாம்' எப்படியும் தமிழ்நாட்டு அரிய கல்வெட்டுக்களில் இதுவும் ஒன்று என்பதில் ஐயமில்லை.

## மங்கலம் கற்கள்

ஈரோட்டிலிருந்து அக்கிரகாரம் வழியாகப் பவானி செல்லும் வழியில் பெருமாள் மலை உள்ளது. அதன் இலக்கியப் பெயர் மங்கலகிரி என்பதாகும். பவானி தல புராணத்திலும் ,ஈரோடு ஐயனாரப்பன் பள்ளு நாடக நூலிலும் புகழப்பட்டமலை. பவானியைச் சுற்றியுள்ள 5 மலைகளில் அதுவும் ஒன்று.

அம்மலையின் அடிவாரத்தில் காலிங்கராயன் வாய்க்கால் கரையில் மங்கலம் என்ற பழமையான ஊர் ஒன்று இருந்து அழிந்து விட்டது. சிவாலயம் ஒன்று அழிந்து கிடக்கிறது. சிதைந்த நிலையில் சில சிலைகளும் கல்வெட்டு உடைய கற்களும் காலிங்கராயன் கால்வாய்க்கு உள்ளும்வயல்வெளியி லும் சிதறிக்கிடந்தன. அங்கு கிடைத்த எழுத்துக்கள் உள்ள 11 கற்களைத் தொகுத்துத் தனியாகக் கலைமகள் தொல் பொருள் கலைக்கூடத்தில் வைக்கப்பட்டுள்ளது. அவைகளி லிருந்து பல செய்திகள் வெளிப்படுகின்றன.

கி. பி. 13ஆம் நூற்றாண்டில் ஆட்சிபுரிந்த விக்கிரம சோழன் கல்வெட்டு இங்கே உள்ளது. அதே நூற்றாண்டில் கொங்கு நாட்டுப் பகுதியை ஆட்சிபுரிந்த வீரபாண்டியனின் பெயர் பொறித்த கல்வெட்டுத் துண்டு ஒன்றும் அவைகளில் உள்ளது.

தொண்டைநாடு, பாண்டியமண்டலத்தின் பெயர்களும் காலிங்கராயன், கச்சிராயன், கரியபிள்ளை, கண்டியதேவன் என்ற பெயர்களும் இக்கல்வெட்டுத் துண்டுகளில் உள்ளன.

பூந்துறை, மங்கலம் (வீரபாண்டிய நல்லூர்) இராசராசபுரம் போன்ற ஊர்களின் பெயர்கள் உள்ளன.

வேட்டுவர், வேளாளரில் கண்ணர் என்ற குலப்பிரிவுகளும் காணப்படுகின்றன. கீழிறை சிற்றாயம்,ஒட்டச்சு, ஆராட்சித் தேவை என்ற வரிகளின் பெயர்களும்பொறிக்ரப்பட்டுள்ளன.

## பருவாச்சி சூலக்கல்

பவானி வட்டம் பருவாச்சியில் மூன்று சூலக்கற்கள் கிடைத்தன. இருபுறமும் அழகிய விளக்குடன் ஒருஉயரமான சூலமும் அருகே இரண்டு சிறு சூலக்சற்களும் கிடைத்தன. பெரிய சூலம் புடைப்புச் சிற்பமாக அழகிய வடிவத்துடன் உள்ளது. அதன்மேல்புறம் ஒருபுறம் சந்திரன் மட்டும் வரையப்பட்டுள்ளது. எதிர்புறம் சூரியன் தெளிவாக இல்லை. அருகில் உள்ள இரண்டு சிறு சூலக்கற்களும் கோட்டுச் சிற்பமாக மட்டும் உள்ளன. அவையிரண்டும் அவ்வளவு தெளிவாக இல்லை. இவை சூலப்படையினுடைய அடையாளமாகவும் இருக்கலாம்.

பெரிய சூலத்தின் கீழே ஒரு கல்வெட்டுக் காணப்படுகிறது அதன் மூலம் பருவாச்சிக்கு அகளங்க நல்லூர் என்ற பெயர் இருந்தமை தெரிகிறது. அகளங்கன் என்பது குலோத்துங்க சோழன் உள்ளிட்ட சில சோழ அரசர்கட்கு இருந்தமையைக் கல்வெட்டுக் கூறுகிறது. களங்கம் இல்லாதவன் என்பது அதற்குப் பொருளாகும். பௌத்த சமயத்தில் போதிசத்து வருக்கும் அகளங்கன் என்ற பெயர் உண்டு.

பாண்டிய நாட்டின் ஒரு பகுதிக்கும் அகளங்கநாடு என்றும், அதன் தலைவன் அகளங்கநாடாழ்வான் என்றும் சிறப்புப்பெயர் பெற்றான்.

வடகரை நாட்டார் என்ற அவையினர் குறிக்கப்படுகின் றனர். கொங்கு நாட்டின் 24 நாடுகளில் வடகரை நாடு என்பதும் ஒன்று. பவானியாற்றின் வடகரையில் அமைந் துள்ள காரணத்தால் அது வடகரை நாடு எனப்பெயர் பெற்றது. அவர்கள் எதனையோ பாதுகாப்பது இங்கு குறிக்கப்படுகிறது,

## ஈங்கூர் அய்யனார்

சாத்தனார் வழிபாடு தமிழ்நாட்டில் தொன்றுதொட்டு இருந்து வருவது. பௌத்தர்களுக்கு மட்டும் அல்ல. எல்லா மதத்தினருக்கும் உண்டு.

சாத்தனை சிவபெருமானின் மகன் என்று தேவாரம் கூறும். "சாத்தனை மகனா வைத்தார் சாமுண்டி ஈசனாரே" என்பது தேவாரம்.

அரி—விஷ்ணு; அரன்—சிவன். இருவருடைய மகனாக சாத்தனாரைக் கொள்வர். அரிகரபுத்திரர் என்பதும் அவ ருக்குரிய பெயர்களில் ஒன்று. இவரை ஐயப்பன், ஐயனார் என்றும் கூறுவர்,

"பவளக்கோட்டு நீலயானை சாதவாகனன் கோயில் உள்ளும் இல்லை" என்பது ஒரு இலக்கண உரைத் தொடர். இத்தொடரில் வருகின்ற சாதவாகனன் — சாத்தனார்தான் என்பது சிலர் கருத்து. இந்தச் சாத்தா—சாத்தன் கோயில் இன்று ஊரெங்கும் உள்ள முனியப்பன் கோயில் என்பது சிலர் கருத்து.

இந்த அய்யனார், அய்யப்பன் வழிபாடு இன்று கேரளா வில் பெரு வழக்காக இருந்தாலும் பழந்தமிழ் நாட்டில்பெருகி இருந்தது. கொங்குநாட்டிலும் நன்கு பரவி இருந்தது.

கொங்கு நாட்டில் ஈரோடு, சிவகிரி, பூந்துறை, வட்டக் கல் வலசு, காங்கயம், ஈங்கூர், பாலதொழு போன்ற

இடங்களில் அய்யனார் வழிபாடு இருந்துள்ளமைக்குச் சான்றாகப் பல சிற்பங்கள் கிடைத்துள்ளன. ஈரோடில் காலிங்கராயன் வாய்க்கால் கரையில் அய்யனாருக்கு ஒரு அழகியகோயில் உள்ளது. அக்கோயிலில் எழுந்தருளியுள்ள அய்யனார் மீது ஒரு பள்ளுப்பிரபந்தம் உண்டு.

இந்த அய்யனார் பெருந்துறை வட்டம் ஈங்கூர் குட்டைத் தோட்டத்தில் கிடைத்ததாகும். இந்த அய்யனாரைக் கி. பி. 1156 ஆம் ஆண்டு போத்தன் செய்யான் என்பவன் எழுந்தருளச் செய்தான். இவனுக்குக் குலோத்துங்கப் பல்லவரையன் என்பது அரசன் அளித்த பட்டப் பெயராகும். இவன் ஈங்கூரைச் சேர்ந்தவன். அந்த ஈங்கூர் மேல்கரைப் பூந்துறை நாட்டில் உள்ளது. இவன் வேட்டுவர்குலத்தில் குறும்பில்லர் என்ற பிரிவைச் சேர்ந்தவன். இவன் இந்த அய்யனார் சிற்பத்தைக் குலோத்துங்க சோழனுடைய ஏழாம் ஆட்சியாண்டு செய்தான். இந்த விபரம் அனைத்தும் இந்த அய்யனாரின் அருகே வெட்டப்பட்டுள்ள கல்வெட்டு மூலம் நாம் அறிகின்றோம்.

யோக பட்டிகையில் அமர்ந்து கையில் செண்டுடனும் அழகிய தலையலங்காரம், ஆபரண வகையுடனும் அய்யனார் காணப்படுகின்றார். அய்யனாரைச் சுற்றிலும் 4 பெண்கள் உள்ளனர். ஒரு பெண்ணின் கையில் ஒரு மான் உள்ளது ஒரு பெண் ஒரு கையில் அக்கினியை வைத்துக் கொண்டுள்ளாள். ஒருபெண் வணங்கிய நிலையில் பக்திப் பரவரசத்தோடு காணப்படுகின்றாள். ஒரு பெண் வழிபாட்டுக்காக நின்று கொண்டுள்ளாள். ஒரு ஓரத்தில் வேடன் ஒருவன் கையில் வில், அம்புகள், கண்ணியுடன் நின்று கொண்டுள்ளான். அய்யனாரின் காலடியில் ஒருவன் (இறந்த நிலையில்) கிடக்கின்றான்.

நிற்கின்ற வேடனுக்குக் கீழே ஒரு நாயும் பன்றியும் உள்ளன. அய்யனாரையும் இவ்வளவு பேரையும் ஒரே கல்லில் செதுக்கிய சிற்பியின் திறத்தைப் போற்றத்தான் வேண்டும்.

ஆறு பேரின் தலையலங்காரமும் ஆறு வகையாக உள்ளது கண்டு வியக்கத் தக்கது. நுட்பமான வேலைப்பாடு கண்டு ரசிக்கக் தக்கது.

காதணிகள், கழுத்தில் மாலைகள், கையில் வாகு வலயம், கடகம், இடுப்பில் மணிகள், ஆடை அலங்காரம்— அவை அணிபப்பட்டிருக்கும் முறை இவை மிகமிகச் சிறப் பாக உள்ளன.

அய்யனாருடன் இநப்பவர்கள் யார்? அய்யனாரின் பரிவார தெய்வங்கள் மட்டுமா? அல்லது பரிவார தெய்வங் களுடன் சிற்பத்தைச் செய்த தலைவனும் குடும்பத்துடன் காட்சியளிக்கின்றானா? இதனை உறுதியாகக் கூறுவதற்கு இல்லை.

எப்படியிருப்பினும் கி. பி. 12 ஆம் நூற்றாண்டின் கொங்கு நாட்டின் சமய, சமுதாய நிலைகளை ஆய்வதற்கும், ஆடை ஆபரண நிலைகள் பற்றித் தெரிந்து கொள்ளுவதற் கும் இச்சிற்பம் மிகச் சிறந்ததோர் ஆதாரமாக உள்ளது. பண்டைக் காலக் கிராமிய வழிபாட்டுமுறையை அப்படியே படம்பிடித்துக் காட்டுவதாக இது உள்ள து.

## அகிலாண்டபுரம் அய்யனார்

அகிலாண்டபுரத்திலிருந்து இங்கே வந்துள்ள அய்யனார் சிற்பம் வேறொரு வகையில் சிறப்புப் பெறுகிறது.

முதலில் இச்சிற்பம் அரசனும் அரசியநும் என்றே கருத்துக் கொள்ளப்பட்டது. ஆனால் அமர்ந்துள்ள ஆண்

உருவத்தின் கையில் செண்டு இருப்பதைக் கொண்டும், தலை அலங்காரம் கண்டும் அய்யனாராக இருக்கலாம் என்று முடிவு செய்யப்பட்டது.

அழகான பீடத்தில் அய்யனார் அமர்ந்துள்ளார். ஆனால் யோகபட்டிகை இல்லை. வலக்காலைக் கீழே தொங்கவிட்டு இடக்காலை மடித்து அமர்ந்துள்ளார்.

அமர்ந்துள்ள அய்யனாரின் இருபுறமும் அய்யனாருக்குச் சமமாக உள்ள பீடத்தில் இருபுறமும் இரு பெண்கள் அமர்ந்துள்ளனர். அவர்கள் அய்யனாருடன் நெருக்கமாகவே அமர்ந்துள்ளனர். இரு பெண்கள் கையிலும் தாமரைமலர் உள்ளது. ஆபரண, ஆடை அமைப்பு கண்டு களிக்கத் தக்கது. அவர்கள் இருவரும் இளம் புன்முறுவலுடன் காணப்படுகின்றனர். அவர்கள் இருவரும் அய்யனாரின் இரு தேவியரான பூரணை, புஷ்கலை இருவராக இருக்கக் கூடும்.

அய்யனாரின் கம்பீரத் தோற்றமும், பூரணை, புஷ்கலை ஆகியோரின்மிக நெருங்கியமர்ந்த அழகிய புன்முறுவல் பூக்கும் தோற்றமும் அருகில் நின்று கண்டு கொண்டே இருக்கலாம். மிக அருமையான சிற்ப வேலைப்பாடு கண்டு கண்டு மகிழத்தக்கது.

இச்சிற்பத்தில் உள்ள அய்யனாரின் சிற்பம் மிக அழகாக உள்ளது. சித்தன்ன வாசலில் கீழே உள்ள கி. பி. 9 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சமண ஓவியங்களுடன் ஒப்பிட்டு ஆராயத் தக்க சிறப்பான சிற்பம்.

## கல்வெட்டு மரபுகள்

கலைமகள் தொல்பொருள் கலைக் கூடத்திலுள்ள கல்வெட்டுக்கள் மூலம் சில கல்வெட்டு வழக்காறுகள் நமக்குத் தெரிகின்றன.

ஸ்வஸ்திஸ்ரீ அல்லது நன்மங்கலஞ்சிறக்க என்ற மங்கலச் சொல்லுடன் கல்வெட்டுத் தொடங்குகிறது.

ஒரு அரசன் எந்த ஆண்டு பட்டத்துக்கு வந்தானோ அது முதல், அதாவது அவ்வரசன் அரசனாகக் கையெழுத் திட்டு ஆட்சி செய்த ஆண்டு முதல் ஆட்சி ஆண்டு தொடங்கப் பெறும், அவ்வாண்டு "திருவெழுத்திட்டுச் செல்லாநின்ற திருநல்லியாண்டு" என்று இரண்டு கல் வெட்டுக்களில் குறிக்கப் பெறுகின்றது. இதனைத் தமிழ் நாட்டின் பிற பகுதி கல்வெட்டுக்கள் 'செங்கோல் பற்றிய ஆண்டு' அல்லது 'வர்ஷவர்த்தனம்' என்று குறிக்கும்.

சாட்சிக் கையொப்பமிடும் அலுவலர்கள் அல்லது நாட்டுச் சபையார் தங்கள் பெயருக்குப் பின் எழுத்து என்று குறிப்பிடுவர். அதுவே சாட்சிக் கையொப்பமாகக் கருதப் படும். காலிங்கராயன் எழுத்து, விழுப்பரையன் எழுத்து என்ற தொடர் இங்கு காணப்படுகிறது.

அரசன் நேரடியாகவோ ஓலை அனுப்பியோ, அல்லது நேரில் குறிப்பிட்ட ஆலயத்திற்கு வந்தோ ஒரு ஆணை வெளியிட்டால் அக்கல்வெட்டில்பெரும்பாலும் அரசன் பெயர் குறிக்காமல் 'கோனேரின்மை கொண்டான்' என்று குறிப்பது வழக்கம். (இது இக்காலத்தில் அமைச்சர் முன்னிலையில் பெயரைக் கூறாமல் மாண்புமிகு அமைச்சர் என்று கூறுவது போல ஆகும்.)

சேர சோழ பாண்டியர் மூவரும் இக்கோனேரின்மை கொண்டான் பட்டம்பெற்றிருக்கின்றனர். இக்கோனேரின்மை கொண்டான் என்ற பெயருடன் கருவலூர், குன்னத்தூர், கொழிஞ்சிவாடி, முத்தூர், ஈரோடு, குடிமங்கலம், பெரிய பாளையம், திங்களூர், எலத்தூர், பாரியூர், குமரலிங்கம், அன்னூர் போன்ற இடங்களில் கிடைக்கின்றன.

வெள்ளோட்டில் கோனேரின்மை கொண்டான் என்ற பெயரோடு வீரபாண்டியன் பெயர் சேர்ந்து வருவதால் அக் கல்வெட்டு பாண்டியனுடையது என்று அறிகின்றோம். கலைமகள் கலைக்கூடத்தில் கோனேரின்மை கொண்டான் என்ற பெயர் விக்கிரம சோழன் பெயருடன் வருவது குறிப்பிடத் தக்கது. அரசன் பெயரோடு கோனேரின்மை கொண்டான் பட்டம் இணைந்து வருவதற்கு இது மிகச் சிறந்த எடுத்துக் காட்டாகும்.

ஒரு கொடையைக் கொடுக்கும்போது அது சந்திர சூரியர் உள்ளவரை நடக்க வேண்டும் என்ற விருப்பத்தை அக்கால மக்கள் தெரிவித்திருக்கின்றனர். 'சந்திராதித்தர் வரை' நின்று நிலவ வேண்டும் என்று குறிப்பிடுவர். வேறு சில இடங்களில் "கல்லும் காவேரியும் புல்லும் பூடும்" உள்ள வரை கொடை நடக்கவேண்டும் என்பர்.

கல்வெட்டின் இறுதியில் பல காப்புச் சொற்களை எழுதுவது பண்டைய மரபு. "அறம் மறவற்க" என்று ஒரு கல்வெட்டில் காணப்படுகிறது. "அறம் அல்லது துணை யில்லை" என்ற தொடரும் சில இடங்களில் இதனுடன் காணப்படும்.

கல்வெட்டுக்களின் இறுதியில் அறக்கொடைகளைப் பாதுகாப்பவர்களுக்கு நல்வாழ்த்தும், அழித்தவர்கட்குச் சாபமும் இடுவது பண்டைய வழக்கம்.

"இத்தன்மம் செலுத்து வான்சீபாதம் தலைமேலே"
" இது காத்தானடி என் தலை மேலின"

என்பவை இங்குள்ள வாழ்த்துச் சொல்லாகும். இவை போன்ற பல தொடர்கள் கல்வெட்டுக்களில் காணப்படும்.

"சிகரம் சுத்துமதிள் உண்டாக்கின பயன்
பெறுவான்"

"ஆயிரம் யாகம் செய்த பலனைப் பெறுவான்"

"அறுபத்து நான்கு விளையாட்டு விளையாடின
அழகிய சொக்கர் அருளைப் பெறுவான்"

என்ற தொடர்களைப் பல கல்வெட்டுக்களில் காணலாம்.

கலைமகள் கலைக்கூடத்தில் சாபத்தைக் கூறும் தொடர்களும் உள்ளன.

"இத்தன்மம் இறக்கினான் கெங்கையிடைக்
குமரியிடை எழுநூற்றுக் காவதத்துள்ளார்
செயித பாவம் கொள்வார்"

"யித்தை இறங்கல் செய்வான் வழி
யேழெச்சம் மறுவான்"

"இறக்கினான் வழி ஏழெச்சம் அறுவான்"

என்பன அவை.

பல கல்வெட்டுகளில்,

"கங்கைக் கரையில் காராம் பசுவைக்
கொன்ற தோஷம்"

வரும் என வெட்டியுள்ளதைக் காணலாம்.

பிற்காலக் கல்வெட்டுக்களில் அரசர்கள் இந்நில உலகை ஆள்வது குறிக்கப்படும். அத்தொடர் "பிருத்விராஜ்யம் பண்ணி அருளா நின்ற" என்று எண்ணமங்கலம் கல் வெட்டில் குறிக்கப்படுகிறது.

கொடையாக அளிக்கப்பட்ட நிலங்களின் எல்லை கூறுவது மிகச்சிறப்பாக இருக்கும். எடுத்துக்காட்டாக வடக்கு எல்லையைக் கூறவேண்டுமானால் நிலத்துக்கு வடக்கே உள்ள நிலத்தையோ ஆற்றையோ, வழியையோ கூறி அதற்குத் தெற்கு என்பர்.

குறும்பர் திருப்பணி செய்து நிலம் அளித்த கல்வெட்டில் இது விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது.

> "இந்நிலம் கீழ்பாற்கெல்லை இட்டேறிக்கு மேற்கு இதன் வடபாற்கெல்லை வம்ம கவுண்டன் நிலப்பூமிக்குத் தெற்கு இதன் மேற்பாற்கெல்லை ஆற்றுக்குக் கிழக்கு இதன் தென்பாற் கெல்லை ஊர் மதிளுக்கு வடக்கு இன்னான்கெல்லைக் குட்பட்ட நிலம் இறையிலியே போகமாகக் கல் வெட்டிக் குடுத்தோம்"

பொதுவாக இறை ஆலயங்களுக்குக் கொடுக்கும்கொடை அனைத்தும் தேவதானம் என்ற பெயரால் குறிக்கப்பெறும். மங்கலம் கற்களில் இத்தொடர் காணப்படுகிறது.

கோயில் அடியார்களால் 'திருவிளக்கு' ஏற்றப்படும். அவ்விளக்கு நந்தாவிளக்கு, நுந்தாவிளக்கு, நொந்தாவிளக்கு என்று பலவாறாகக் குறிக்கப்பெறும். இவை எப்போதும் எரியும் விளக்குகள் பூசை நேரத்தில் மட்டும் எரியும் விளக்குகள் சந்தி விளக்கு எனப்படும்.

## மொழி நடை

கி. பி. 10 ஆம் நூற்றாண்டு முதல் கி. பி. 14 ஆம் நூற்றாண்டு வரை இக்கலைக்கூடத்தில் கல்வெட்டுக்கள் உள்ளன. அவைகளை ஆராய்ந்தால் அக்கால மொழி யமைப்பு நமக்குநன்கு தெரியும்.

| கல்வெட்டில்உள்ளபடி | ... | திருந்தியவடிவம் |
|---|---|---|
| பிராந்தக தேவன் | - | பராந்தக தேவன் |
| செது குடுத்தோம் | - | செய்து கொடுத்தோம் |
| உயக் கொண்டான் | - | உய்யக் கொண்டான் |
| அஞ்சு கரை | - | ஐந்துகரை |
| அஞ்ஞூற்றுவன் | - | ஐநூற்றுவன் |
| திகையாயிரம் | - | திசையாயிரம் |
| எடுப்பிச்ச | - | எடுப்பித்த |
| அய்யநார் | - | ஐயனார் |
| கொலொத்துங்க | - | குலோத்துங்க |
| ஈங்கையூர் | - | ஈங்கூர் |
| தெக்கு | - | தெற்கு |
| குறும்பகளோம் | - | குறும்பர்களோம் |
| சொன்னன் | - | சொர்னன் |
| சுவத்தி | - | ஸ்வஸ்தி |
| முமுடி சோழபுரம் | - | மும்முடி சோழபுரம் |
| தன்மம் | - | தர்மம் |
| எழுந்நூறு | - | எழுநூறு |
| வேள்டாழி | - | வேள்தாழி |
| ஏழச்சம் | - | ஏழெச்சம் |
| வளஞ்சிரிகர் | - | வளஞ்சியர் |
| மதிரை | - | மதுரை |
| ஆளுறவன் | - | ஆள்கிறவன் |
| வெண்டுவ்வன் | - | வெண்டுவன் |

## சொல்லும் பொருளும்

| | | |
|---|---|---|
| ஸ்வஸ்திஸ்ரீ | - | மங்கலம் உண்டாகட்டும் |
| இராசகேசரி | - | பகை அரசர்க்குச் சிங்கம் |
| நானாதேசி | - | பல நாடுகள் |
| திகை | - | திசை |
| பரிசு | - | விதம்[முறை] |
| கீழிறை | - | உள்ளூர் வரி |
| சிற்றாயம் | - | சிறுவரி, நாட்டுக்குச் செலுத்துவது |
| தென்னவன் | - | பாண்டியன் |
| ரக்ஷை | - | பாதுகாப்பு |
| அறுவான் | - | அழிவான் |
| வத்து | - | பொருள் |
| முட்டாமல் | - | குறையாமல் |
| மடைப்பள்ளி | - | கோயில் சமையல்அறை |
| இறக்கினான் | - | அழித்தான் |
| இறங்கல் | - | தீங்கு |
| தேவதானம் | - | இறைவனுக்குக் கொடை |
| காவதம் | - | சுமார் நாலரை மைல் |
| சந்திராதித்தர் | - | சந்திர சூரியர் |
| எச்சம் | - | வமிசம் |
| கன்மி | - | தொழில் செய்வோன் |
| பலிசை | - | வட்டி |
| பாரிசம் | - | பகுதி |
| இறையிலி | - | வரியில்லாமல் |
| சொன்னம் | - | பொன் |

| | | |
|---|---|---|
| | - | பகலும் இரவும் சந்திக்கும் வேலை |
| ஒட்டச்சு | - | ஓட்டியர் காவலுக்குக் கொடுத்தவரி |
| ஆராட்சித்தேவை | - | ஒரு வழக்கை எடுத்துக் கொள்ளச் செலுத்தும் வரி |




கலைக்கூடத்தில் அன்னை அவர்கள்



விளக்கேத்தி நடுகல்



தொல்பொருள் ஆய்வுத் துறை
இயக்குநர் DR. R. நாகசாமி
அவர்களுடன் ஐயா.



பாசூர்-முக்குடி வெலம் பாளையம்
வேடன்கல்காடு



பாசூர்-முக்குடி வேலம் பாளையம்
வேடன்கல்காடு-பழம்பொருட்கள் தேடல்



அன்னையும் நிறுவனர் ஐயாவும்
தாழியைப் பார்வையிடல்



3000 ஆண்டுகட்கு முற்பட்ட சோழகங்க பாளையம் புதைகுழியை
அன்னையுடன் நிறுவனர் ஐயா அவர்கள் பார்வையிடல்

# [13] நாணயங்கள்

தொல்பொருள் கலைக்கூடங்களில் இன்றுநாணயவியல் மிகவும் இன்றியமையாத இடத்தைப்பெற்றுள்ளது.நாணயவியலுக்கு ஆங்கிலத்தில் Numismatics என்று பெயர்.

இன்று நாணயங்களைப்பற்றிஇதழ்கள் வெளிவருகின்றன. நூல்களும் பல வெளிவந்துள்ளன. கருத்தரங்குகள் பல நடைபெறுகின்றன. அகில இந்திய நாணயவியல் கழகம் கல்கத்தாவில் மிகச்சிறப்பாக நடைபெறுகிறது.

கெட்டுப் போகாத காரணத்தால் தொல்பொருள் இயலில் நாணயம் மிகச்சிறந்த இடத்தைப் பெறுகிறது. நாணயங்கள் மூலம் ஒரு ஆட்சியின் பரப்பு, காலம், வணிகத் தொடர்பு, பண்டைக்காலச் செய்திகள், சிற்பம், ஓவியக்கலையின் வளர்ச்சி இவைகளையெல்லாம் நன்கு அறிகின்றோம்.

கொங்கு நாடெங்கும் பல நாணயங்கள் கிடைத்திருக்கின்றன. பழங்கொங்கு நாட்டில் அக்க சாலைகள் (நாணயச் சாலைகள்)பல இருந்ததாக வரலாறு நமக்கு கூறுகிறது.

கலைமகளில் பொன், வெள்ளி, செம்பு ஆகிய உலோகத்தால் ஆன பல நாணயங்கள் இருக்கின்றன. வார்ப்பு முறையும் அடிக்கும் முறையும் நாணயம் செய்யப் பயன்பட்டன.

யானை உருவம் பொறித்த சேரமன்னரின் சதுரக் காசுகள், இராசராச சோழனின் ஈழக்காசுகள் சமர. கோலாகலன் காசு, நந்தி வடிவமுடைய பல்லவர் காசுகள், விஜயநகர அரசரின் இராமதங்காகாசு, மைசூர் உடையார் கள் காசு, நவாபுகள்-சுல்தான் காலக் காசுகள், கம்பெனிக் காசுகள் முதலிய பற்பல இருக்கின்றன. பல நாட்டுக் காசு களும் உள்ளன.

பல காசுகள் ஆழமான ஆராய்ச்சிக்கு உரியவை.

# [14] ஏடும் எழுத்தாணியும்

பண்டைக்கால மக்கள் எழுதுவதற்கு பனை ஓலையை யும் (ஏடு) எழுத்தாணியையுமே பயன்படுத்தினர். அச்சுக் கலை வருவதற்கு முன்னர் தமிழ் இலக்கியங்கள் அனைத்தும் ஓலையிலேயே எழுதப்பட்டிருந்தன.

அக்காலத்தில் அரசனது ஆணைகள் அனைத்துமே ஓலையில் எழுதப்பட்டு அனுப்பப்பட்டன. அரசன் உத்தரவுக்கும்,ஓலையில் எழுதும் அதிகாரிக்கும் 'ஓலை' என்றே பெயர் வழங்கியது. பல ஓலைகளின் தலைவன் ஓலை நாயகன், [திரு மந்திர ஓலை நாயகன்]எனப்பட்டான். செப்பேடுகளே ஓலையைப் பார்த்துச் செய்யப்பட்டன என்ற கருத்தும் உண்டு.

கலைமகளில் மகாபாரதம், கம்பராமாயணம், பாகவதம் திருவாசகம், திருவாதவூர்ப் புராணம், சேதுபுராணம் நீதி சாரம், சித்தர்பாடல், மன்மதன் கதை. தனிப்பாடல்கள் இராமாயண அகவல், பாண்டவர் வனவாசம், பழனித் திருப்புகழ் இவைகளுடன் பல நல்ல இசைப்பாடல்களும் இருக்கின்றன. இரண்டு எழுத்தாணிகள் உள்ளன. அவற்றை சென்னிமலை திரு. சண்முகம் அளித்தார்.

பழங்காலத்தில் செப்பேடுகளுக்கு ஓலை நகல் இருந்தன. மயிலாப்பூர்ப் பட்டயத்தின் ஓலை நகல் இங்கே உள்ளது, பிற்காலச் சமூக வரலாற்றின் ஆராய்ச்சிக்கு அது இன்றியமையாத ஏடு.

சுமார் 175 ஆண்டுகளுக்கு முற்பட்ட நில விற்பனைப் பத்திரத்தின் ஓலை ஒன்று கிழக்கிந்தியக் கம்பெனியின் முத்திரையுடன் உள்ளது. முத்திரையும் சாட்சிக் கையொப்பங்களும் பதித்த அந்த ஒரு ஏடு சிறப்பாக பாதுகாக்கப்பட்டு வருகிறது. கூந்தற்பனையில் எழுதிய சில கிரந்த, நாகரி ஓலைகளும் உள்ளன.

# [15] சிலைகள்

## நடுகற்கள்

வீரமரணம் எய்திய ஆடவர்கட்கும், பெண்களுக்கும் நினைவாகக் கல் நடுவது தமிழரது பண்டைய வழக்கங்களில் ஒன்று. இந்நடுகற்களை நினைவுக்கற்கள் என்றும் கூறலாம்.

தொல்காப்பியர் நடுகல் நடும் வழக்கம் பற்றிப் பொருளதிகாரம் புறத்திணை இயலில் மிகச் சிறப்பாகக் கூறியுள்ளார். அகநானூற்றில் இரண்டு பாடல்களில் நடுகல்லின் சிற்பமும், எழுத்தும் அழிந்துபட்ட நிலை இருந்ததைத் தெளிவாகக் காட்டுகிறது. அதன் மூலம் நடுகல்லின் தொன்மையை அறிகின்றோம்.

இறந்த வீரனின் பீடும், பெயரும் பொறித்த கற்களைச் சங்க இலக்கியம் தெளிவாக நமக்குக் காட்டுகிறது. விளக்கு வைத்தல், ஆடு பலி கொடுத்தல், வெண்மை ஆடை போர்த்துதல், வேலும் கேடயமும் நடுதல், கள்ளும் உணவும் படைத்தல் முதலிய பல்வேறு நடுகல் வழிபாட்டு முறைகளையும் காணுகின்றோம்.

பெரியார் மாவட்டத்தில் பல இடங்களில் நடுகற்கள் உள்ளன. விண்ணப்பள்ளி, தனவாசி, கவுந்தப்பாடி, ஊராட்சிக் கோட்டை, வாய்ப்பாடி, காஞ்சிக்கோயில், அறச்சலூர், வெள்ளோடு, பழமங்கலம், விளக்கேத்தி, பவானி, பெரிய புலியூர் போன்ற பற்பல இடங்களில் நடுகற்களைக் காணுகின்றோம்.

பழமங்கலத்தில்தான் நடுகல்லில் எழுத்து பாடல் வடிவத்தைக் கொண்டுள்ளது.

"வாய்த்தபுகழ் மங்கலத்து வந்தெதிர்த்த
மாற்றலரைச்
சாய்த்தமருள் வென்ற சயம்பெருகச்-சீர்த்தபுகழ்
நிக்குவணம் கற்பொறிக்கப் பட்டான்
கரையகுலச்
சொக்கனேந்த லேவுலகில் தான்"

என்பது அப் பாடல்.

கலைமகள் தொல்பொருள் கலைக்கூடத்தில் ஏழு நடுகற்கள் உள்ளன. அவைகளை வரிசையாகக் காண்போம்.

## பெரியசேமூர் நடுகல்

ஈரோட்டை அடுத்த பெரிய சேமூர் சூளைக் காட்டிலிருந்து இரண்டு சிறப்பான நடுகற்கள் இங்கு வந்துள்ளன. பெரிய பலகை கற்களில் சுமார் 2 அடி அகலத்திலும் 5 அடி உயரத்திலும் அந்த நடு கற்கள் அமைந்துள்ளன.

இரண்டு கற்களிலும் வீரனின் உருவம் நின்ற கோலத்தில் அழகிய புடைப்புச் சிற்பமாகப் பொறிக்கப்பட்டுள்ளது. அவைகளின் ஆடை, ஆபரணம், காதணி, தலையலங்காரம் ஆகியவை கண்டு கண்டு வியக்கத் தக்கன.

ஒரு கல்லின் உருவத்தில் பழங்கால அமைப்பில் இடக் கையில் அரிய உருவமுடைய கேடயம் ஒன்றும் வலக்கையில் குறுவாளும் காணப்படுகிறது. வீரனின் கால்கள் சற்று மடிந்த நிலையில் காணப்படுகிறது.

மற்றொரு சிற்பத்தில் வலக்கையில் மட்டும் நீண்ட வேல் காணப்படுகிறது.

இச்சிற்பங்களின் அழகைக் காணும்பொழுது கம்போடிய நாட்டில் கிடைத்துள்ள போராபுதூர் சிற்பங்கள் நம் நினைவுக்கு வரும். மங்கோலிய சிற்பங்களின் சாயலையும் இவற்றில் காணுகின்றோம். இவை இரண்டும் பெரும்பாலும் ஒரே உருவ அமைப்பை ஒத்துள்ளது. இவை கி. பி. 13ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவையாக இருக்கலாம்.

## பழமங்கலம் நடுகல்

வரலாற்றுச் சிறப்புமிக்க வெண்பா வடிவில் எழுத்துடைய நடுகல்லைக் கொண்டிருக்கும் பழமங்கலத்தில் உள்ள நத்தக் காட்டில் இந்த நடுகல் கிடைத்தது.

கொங்கு நாட்டில் பல இடங்களில் காணுகின்ற புலியுடன் பொருத நிலையில் உள்ள ஒரு வீரனின் நடுகல்லாகும் இது. வீரனின் தலையலங்காரம், உடை, குறுவாள், செருப்பு இவை அழகிய வேலைப்பாடுடன் உள்ளன. புலி, வீரன் மேல் பாய்ந்த நிலை காணப்படுகின்றது. புலியின் மூன்று கால்கள் வீரன் மேல் பதிந்துள்ளது. புலியின் தோற்றம் மிகப் பெரியது. புலியின் அடிவயிற்றில் வீரன் கையில் உள்ள ஈட்டி பாய்ந்துள்ளது.

புலியைக் கண்டு அஞ்சாத கம்பீரமான தோற்றத்தில் வீரனின் உருவத்தைக் காணுகின்றோம்.

## சிவகிரி நடுகற்கள்

மேல்கரை அரைய நாட்டின் தலைநகர் தலைய நல்லூர். இன்று அதன் பெயர் சிவகிரி என்று மாறி விட்டது. அதன் அருகே உள்ள கவுண்டம்பாளையம் நத்தக்காட்டில் இரண்டு நடுகற்கள் கிடைத்தன. தொகுப்பாசிரியர் பார்த்த முதல் நடுகற்கள் அவை.

தலையநல்லூரைச் சேர்ந்த கிழங்க வேட்டுவரில் கிழங்கன் பெரிய கிழங்கன் சிலை ஒன்று. மிக மிக அருமை யான அவன் உடல்வாகு கண்டு மகிழத்தக்கது. கையில் ஈட்டியும், கேடயமும், இடையில் குறுவாளும் இருக்கின்றன.

இதன் அருகிலேயே அழகிய மற்றொரு நடுகல்லும் கிடைத்தது. வாளும் கேடயமும் சிறப்பான தோற்றம் உடையவை. இவை இரண்டும் கி. பி. 13 ஆம் நூற்றாண் டைச் சார்ந்தவை.

## ஆப்பக் கூடல் நடுகல்

நின்ற நிலையில் ஒரு புலியின் வயிற்றில் ஒரு நீளமான ஈட்டியைப் பாய்ச்சிய வீரன் சிலையுடன் புலிக்குத்திக் கல் ஒன்று சக்திநகர் (ஆப்பக்கூடல்) சர்க்கரை ஆலை எல்லைக் குள் கிடைத்தது. இது காலத்தால் சற்றுப் பிற்பட்டது.

## பெ. மேட்டுப்பாளைம் குதிரைக்கல்

பெருந்தலையூர் மேட்டுபாளையத்தின் அருகே இந்தக் கல் கிடைத்தது. நான்கு குதிரையில் நால்வர் அமர்ந்துள்ள

னர். குதிரைப் போர்க் காட்சி நன்கு சித்தரிக்கப்பட்டுள் ளது. கீழே ஒரு குதிரையின் எதிரே ஒரு வீரன் ஓங்கிய வாளு டன் குதிரைப் படையை எதிர்த்து நிற்கின்றான்.

குதிரைகளும், அமர்ந்துள்ள வீரர்களும் மிகச் சிறிய அமைப்பாக இருந்தாலும் நல்ல நுட்பமான வேலைப்பாட்டு டன் அமைந்துள்ளது. குதிரைகள் பாய்ந்து செல்லும் நிலை அழகாக உள்ளது. கூகலூர் வரலாற்றுப் பேரவையினர் முயற்சியால் இக்கல் கிடைத்தது.

கலைமகளில் உள்ள நடுகற்கள் அனைத்தும் சிறப்பான வேலைப்பாடு உடையவை. கொங்கு நாட்டு வரலாற்றை மட்டுமல்ல. உடை, அணி, தலையலங்காரம், ஆயுதங்கள் இவற்றைப் பற்றி விரிவாக ஆராயும் துணையாக இருக்கும்.

## காலிங்கராயன் சிலை

கி. பி. 13 ஆம் நூற்றாண்டில் ஈரோடு வட்டம் வெள் ளோட்டில் தோன்றி, பாண்டியர்தம் படையில் சேர்ந்து தளபதியாகிப் பாண்டியனுக்கு அமைச்சனுமாகிக் கொங்கு நாட்டில் அதிகாரம் செலுத்தியவன் காலிங்கராயன்.

காலிங்கராயன் என்பது வீரபாண்டியன் கொடுத்த பட்டப் பெயர். அண்மையில் கிடைத்த ஒரு செப்பேடு காலிங்கராயனின் இயற்பெயர் 'லிங்கையன்' என்று கூறு கிறது. அவர் தந்தை பெயர் நஞ்சையன் என்பதாம்.

தம் குடும்பச் சொத்தினைக் கொண்டும், வீரபாண்டி யன் உதவி கொண்டும், உறவினர் ஆதரவைக் கொண் டும், காலிங்கராய வினியோகம் என்ற பெயரில் நாட்டில் விதித்த வரியைக் கொண்டும் காலிங்கராயன் அணைகட்டி

வாய்க்காலும் வெட்டினான். இச்சிறப்பான பணி முடிய 12 ஆண்டுகள் ஆயிற்று என்பர்.

பவானியாறு காவிரியில் கலக்கும் இடத்தில் இந்த அணை கட்டப்பட்டுள்ளது. அணை கட்டிய இடத்திலும் அதனுடைய 56½ மைல் போகும் தன்மையிலும் கி. பி. 13 ஆம் நூற்றாண்டின் பொறியியல் திறத்தைக் காணு கின்றோம்.

காலிங்கராயனுடைய இந்தப் பணியை எண்ணற்ற இலக்கியங்களும், செப்பேடுகளும் பாராட்டுகின்றன. பிற்கால மக்கள் காலிங்கராயனைத் தெய்வமாகவே வழிபட்டனர். அணையின் அருகே பவானி ஆற்றில் உள்ள தோப்பில் காலிங்கராயனுக்குக் கோயில் உண்டு.

கால்வாய் நெடுகிலும் பல இடங்களில் அவனைத் தெய்வமாக்கி வழிபட்டிருக்கின்றனர். பெரிய அக்கிரகாரம் அருகே முன்பு ஒரு கோயில் காலிங்கராயனுக்கு இருந்து அழிந்திருக்க வேண்டும். சிதைந்த அக்கோயிலில் இருந்த சிற்பத்தைக் காலிங்கராயன் கால்வாய்க்குள்ளேயே போட்டு விட்டனர். அதனை எடுத்துப் பாதுகாப்பாகக் கலைமகள் கலைக்கூடத்தில் வைத்துள்ளனர். பிற்கால மக்கள் செய்த காலிங்கராயன் சிலையாகும் அது.

முன்னொரு காலத்தில் சீதையைச் சிறை மீட்க இராமன் சேது அணை கட்டினான். காவிரி பெருகிய காலத்தில் கரிகாலன் காவிரியில் கல்லணை கட்டிக் கரையும் போட்டான். அதற்கு அடுத்தாற்போல் சிறப்பான செயல் காலிங்கராயன் அணை கட்டியதேயாகும் என்று பாடுகிறார் ஒரு புலவர்.

"திரை கொண்ட வாரியை மாலடைத்தான்
செழும் காவிரியை
உரை கொண்ட சோழன் முனாள் அடைத்தான்
உலகு ஏழறிய
வரை கொண்ட பூந்துறை நாடது வாழப்
பவானிதனைக்
கரை கொண் டடைத்தவன் வெள்ளோடைச்
சாத்தந்தை காலிங்கனே"

என்பது அப்புலவர் பாடிய பாடலாகும்.

## விநாயகர்

அடியார்களின் விக்கினங்களைப் (குறைகளை)போக்கும் விக்கினேசுவரன் விநாயகர். இவர் சிவ கணங்களின் தலைவர், கணபதி என்றெல்லாம் அழைக்கப் பெறுபவர். எந்தக் காரியம் தொடங்கினாலும் முதல் வழிபாடு கணபதிக்கே. வேலைப்பாடு மிக்க இவ்விநாயகர் கத்தாங் கண்ணியில் ஒரு பள்ளத்தில் கிடைத்த சிற்பம். இவ்வூரின் திருந்திய பெயர் கற்றான்காணி என்பது.

## சிவலிங்கம்

சிவபெருமானின் பெருமைக்கு அறிகுறி சிவலிங்கம். "காணாத அருவினுக்கும் காணுகின்ற உருவினுக்கும் காரணமாய் – நீள்நாகம் அணிந்தார்க்கு நிகழ்குறியாம் சிவலிங்கம்" என்பது சேக்கிழார் வாக்கு.

சிவலிங்கம் மூன்று பகுதியாக இருக்கும். அடி-நடு மேல்பகுதி. பகுதி மூன்றில் அடிப்பகுதி பிரமபாகம், நடுப்

பகுதி விஷ்ணுபாகம், மேல் பகுதி ருத்ரபாகம். கீழிரு பகுதியான ஆவுடையார் சக்திபாகம் என்றும், மேல் பகுதியைச் சிவபாகம் என்றும் கூறுவர்.

சிவஞான சித்தியாரில் முதற்சூத்திரம் 89 ஆம் பாடல் சிவலிங்கத்தின் தத்துவத்தை விளக்குகிறது. கலைமகளில் உள்ள சிவலிங்கம் தாராபுரம் அவினாசிபாளையத்தில் கிடைத்தது.

## அம்மன் சிலைகள்

கலைமகள் தொல்பொருள் கலைக்கூடத்தில் இரண்டு சிவாலய அம்மன் சிற்பங்கள் இருக்கின்றன.

பழங்காலத்தில் சிவாலயத்தில் அம்மனுக்கென்று தனியாக ஆலயம் இல்லாமலிருந்தது. கி. பி. 11 ஆம் நூற்றாண்டுக்குப் பின்னரே கொங்கு நாட்டில் பல திருக்காமக் கோட்டங்கள் [அம்மன் ஆலயங்கள்] ஏற்படுத்தப்பட்டன. இதற்குக் கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன.

இங்குள்ள அம்மன் சிற்பம் ஒன்று ஈரோட்டிலிருந்து பவானி செல்லும் வழியில் இருந்து அழிந்து போன மங்கலம் என்ற ஊரிலிருந்து வந்துள்ள சிற்பம். இடுப்புக்கு கீழே உடைந்துபோன பகுதியாக இருந்தாலும் ஆடை ஆபரண அமைப்பில் மிகச் சிறந்து விளங்குகிறது.

மற்றொரு சிற்பம் பாலத் தொழுவிலிருந்து வந்துள்ள சிற்பம். பிற்கால கொங்குக் கலைக்கு எடுத்துக் காட்டாகக் கூறக்கூடிய அளவுக்கு மிகச் சிறந்த சிற்பம்.

சங்கரநாராயணர் எப்படி சைவவைணவ ஒருமைப் பாட்டுச் சிற்பமோ அது போல இந்த அம்மன் பார்வதி

லட்சுமி இணைந்த அமைப்பாகச் செய்யப்பட்டுள்ளது. ஒரு கையில் மலராத தாமரையும் [லட்சுமி] அடுத்த கையில் மலர்ந்த தாமரையும் [பார்வதி] உள்ளதால் இவ்வாறு கூறுவர் ஒரு கல்லில் திருவாசியுடன் கூடிய அழகிய சிற்பம் சுமார் 700 ஆண்டுகட்கு முற்பட்டது.

## முருகன்

பிற்காலப் பல்லவர், அல்லது முற்காலச் சோழர் கலைப் பாணியில் ஒரு தொன்மையான முருகன் சிற்பம் கலைமகள் கலைக்கூடத்தில் உள்ளது. நின்ற நிலையில் நான்கு திருக் கரங்களுடன் ஒரு இடக்கையை இடுப்பில் வைத்து மற்றொரு வலக்கை அடியார்களுக்கு அபயமளிக்கும் நிலையிலும் உள்ளது. மற்ற இரண்டு கைகளிலும் வலப்புறம் மேல்நோக்கிய கையில் அக்கமாலையும், இடப்புறம் மேல் நோக்கிய கையில் வச்சிரப்படையும் உள்ளது. தலை கரண்ட மகுடம் என்ற அமைப்பைப் பெற்றது. சன்னவீரம், உதரபந்தம் உத்தரியம் ஆகியவை அழகிய முறையில் செதுக்கப்பட்டுள்ளன. காதுகளில் குண்டலம் உள்ளது.

படைப்புக் கடவுளாகிய பிரமனின் சாயலையும் முருகன் மீது ஏற்றி முருகனை முழுமுதற் கடவுளாகப் படைக்க வேண்டும் என்ற நோக்குடன் சிற்பி இதனைவடித்துள் ளான். இம்முருகனுக்கு 4 கரங்கள் இருப்பது நான்கு திசையைக் குறிப்பதாக இருக்கலாம்.

தமிழகத்தில் உள்ள தொன்மையான, வரலாற்றுச் சிறப்புமிக்க முருகன் சிற்பங்களுக்குள் கலைமகள் தொல் பொருள் கலைக்கூடத்தில் உள்ள இதனையும் ஒன்றாகக் கருதலாம்.

பாண்டிச்சேரியில் உள்ள இந்தியவியல் ஆராய்ச்சி நிறுவனத்தின் முருகனைப்பற்றிய ஆங்கில, பிரெஞ்சு மொழி

நூலில் இக்கலைமகள் சிற்பம் இடம் பெற்றுள்ளது. எனவே இதனை உலகப்புகழ் பெற்றது என்று கூறலாம். கொங்கு நாட்டுக் கலைக்கு இது ஒருமிகச்சிறந்த எடுத்துக்காட்டாகும்.

## சண்டிகேசுவரர் சிற்பங்கள்

சைவ சமய நாயன்மார்கள் அறுபத்துமூவரில் ஒருவர். தந்தையின் தாளை எறிந்து சிவனடி சேர்ந்தவர். சிவபெருமான் சண்டீசப்பதம் கொடுத்து அருகிலேயே வைத்துக் கொண்டார். சிவாலய அமைப்பில் சிவபெருமானின் வடக்குபக்கமாக சண்டிகேசுவரருக்கு தனி ஆலயம் இருக்கும்.

சண்டிகேசுவரர்தான் சிவபெருமானின் எல்லாச் சொத்துகளுக்கும் தலைவர்—உடைமையைப் பாதுகாப்பவர் பண்டைக் காலத்தில் கோயிலுக்குப் பொருளைக் கொடுத்தாலும், கோயில் பொருளை வாங்கினாலும் சண்டிகேசுவரர் பெயரில் தான் எழுதுவது வழக்கம். அதனை சண்டேசுரன் ஆதேசம் என்று கல்வெட்டுக் கூறும். சில கல்வெட்டுக்களில் சண்டேசுரன் பற்றிய வெண்பா ஒன்று காணப்படும்.

"சண்டீசுரன் ஓலை சாகரம் சூழ் வையகத்துக்
கண்டீசன் கருமம் ஆராய்க - பண்டே
அறம்செய்தான் செய்தான் அறங்காத்தார் பாதம்
திறம்பாமல் சென்னிமேல் வைத்து"

என்பது அப்பாடலாகும்.

ஈரோட்டை அடுத்த இராமநாதபுரத்திலிருந்தும், தாராபுரம் வட்டம் அவினாசிபாளையத்திலிருந்தும் இரண்டு



ஈழக்காசு முதலியன




















சேரர், மைசூர் முதலிய காசுகள்










பல்லவர் காசுகள்



கலைக்கூடத்தை சேலம் அரும்பொருட் காட்சி யகத்தின் காப்பாட்சியாளர் க. இலக்குமி நாராயணன், ஆசிரியர் புலவர் செ. இராசு, பதிப்பாளர் ட. நடராசன் ஆகியோர் பார்வையிடுதல்.

சண்டிகேசுவரர் சிற்பங்கள் இங்கு வந்துள்ளன. அழகிய சிற்ப அமைப்புக் கொண்டவை. நுட்பமான வேலைப்பாடு மிக்கவை.

## தட்சிணாமூர்த்தி

கல்லால மரத்தின் கீழிருந்து சநகர் முதலிய முனிவர் நால்வருக்கும் உபதேசம் செய்தவர். அதனைச் 'சொல்லாமல் சொன்னவர்' என்று இலக்கியம் பாராட்டும்! சிவாலயத்தின் தெற்கே தென்திசை நோக்கியே இருப்பார். அதனால் இவர் தென்திசைக் கடவுள் என்றும் அழைக்கப் படுவார். சிலர் சிவ மூர்த்தத்தின் திரு உரு. யோக தட்சிணாமூர்த்தி, வீணா தட்சிணாமூர்த்தி என இருவகைத் திருமேனிகள் உண்டு. இங்குள்ள தட்சிணாமூர்த்தி யோகதட்சிணாமூர்த்தி. மேல் பகுதியின்றிக் கீழ்ப்பகுதி மட்டும் கிடைத்துள்ளது. ஈரோடு அருகேயுள்ள இராமநாதபுரத்தில் கிடைத்த அழகிய சிற்பம்.

## கண்ணப்ப நாயனார்

காளத்தி வேடன் என்று புகழப்படுபவன் கண்ணப்பன். வேடர் குலத் தலைவனுக்கு மகனாகப் பிறந்து திண்ணன் என்று பெயர் பெற்று வேட்டைக்குச் சென்ற இடத்தில் சிவ பெருமானால் ஆட்கொள்ளப்பட்டவர்.

எச்சில் பன்றிக் கறியையும், வாயில் அபிடேக நீரையும், கூந்தலில் பூவையும் கொண்டு சென்றவர். உண்மையான அன்புடன் கொடுக்கப்பட்ட காரணத்தால் சிவபெருமானல் ஏற்றுக்கொள்ளப்பட்டது. எதை அளிக்கிறோம் என்பது முக்கியம் அல்ல எப்படி அளிக்கிறோம் என்பது தான்

முக்கியர். இதனைக் கண்ணப்பர் வாழ்க்கைமுறை நமக்கு க் காட்டுகிறது. கண்களையே சிவனுக்கு அளித்தவர்.

கொங்கு நாட்டில் கண்ணப்பன் வழிபாடு மிகுதி. ஏன் எனில் கொங்கு நாட்டின் பூர்வீக மக்களான வேட்டுவர்கள் தங்களைக் கண்ணப்பன் வழியில் வந்ததாகக்கூறிக் கொள்வர்.

திங்களூர் அப்பச்சிமார் மடத்து வேட்டுவப் பட்டக்காரர்கள்.

"தின்று ருசி யானகரி தன்னைச் - சிவனே
தின்னப்பா எனக் கொடுத்த கண்ணப்ப
வங்கிசத்தான்"

என்று போற்றப்படுகின்றனர்.

இடக்கையில் அம்பும் வில்லும், வலக் கையில் சிவலிங் கமும் உடைய கண்ணப்பன் சிற்பம் கொடுமுடி அருகே காவிரிக்குள் கிடந்து இங்கு கொண்டுவரப்பட்டது.

## மதுரை வீரன்

அழகிய தலை அலங்காரத்துடன் கையில் வாளும் வில்லும் தாங்கிய மதுரை வீரன் சிலை கொடுமுடியில் காவிரிக்குள் கிடந்து கொண்டு வரப்பட்டுள்ளது.

## துவார பாலகி

அம்மன் கோயில் வெளிப்புறம் வாயில் காவல் காக்கும் துவார பாலகி சிற்பம். சிறு சிற்பமானாலும் அழகிய கோலத் துடன் காணப்படுகிறது. உடையலங்காரம் காணத்தக்கது. கொடுமுடியில் கிடைத்தது.

## பைரவர்

சிவாலயபரிவார தெய்வங்களுள் ஒருவர், தக்கன், விஷ்ணு பிரமன் மூவரும் அகங்காரம் மேலிட்டிருந்த போது சிவன் ஆணையால் தண்டித்து அனுக்கிரகம் செய்தவர். நான்மறை யாகிய வேதமே இவருக்கு நாய்வடிவம் கொண்டது என்பர். இவர் பைரவ புவனத்தில் வீற்றிருப்பார். படைத்தல், காத்தல், அழித்தல் என்ற மூன்று தொழிலுக்கும் உரியவர், நீலநிறம் உடையவர். திருவடியில் சிலம்பும், மார்பில் தலை மாலையும், கையில் சூலமும், மழு, பாசம், உடுக்கையும், மூன்று கண்களும் கோரப்பற்களும் செஞ்சடையும், சிற்ற நகை கொண்ட முகமும் உடையவர். ஊழிபிறுதிக் காலத்தில் சிவன் ஏவலால் எல்லாவற்றையும் அழிப்பவர். பைரவரையே முழுமுதற் கடவுளாகக் கொண்டது பைரவ சமயம். இங்குள்ள மிக அழகிய பைரவர் சிலை இராமநாதபுரத் திலிருந்து கொண்டு வந்தது.

## நாகர்

நாக வழிபாடு உலகில் மிகத் தொன்மையானது. பல் வேறு நாடுகளில் நாக வழிபாடு மிகச் சிறப்பாக நடைபெற்று வந்தது. பண்டைய தமிழ் இலக்கியங்களிலும் நாகவழிபாடு பற்றிக் காணுகின்றோம். நாகர்கோயில், நாகப்பட்டினம் என்ற பெயர்கள் ஆய்வுக்குரியன.

கொங்கு நாட்டில் சிறுவர்கள், சிறுமிகள் கூட...

“காக்கைக்குப் பொங்க வெச்சுக்
கைமுறிஞ்சு போச்சு
நாகருக்குப் பொங்க வெச்சு
நல்லாப் போச்சு”

என்று பாடுகின்றனர். இன்றும் நாகப்பாம்பின் புற்று வழி பாட்டுக்கு உரியதாக விளங்குகிறது. கேரளாவில் 'பாம்புக்கா' வழிபாடு உண்டு. ஆற்றோரங்களிலும், அரசமரத்தடியிலும் நூற்றுக்கணக்கான நாகர் சிற்பங்களைக் காணலாம்.

கொடுமுடிக் காவிரிக்குள் கிடந்த அழகிய நாகர் சிற்பம் ஒன்று இங்கு பாதுகாப்பாக வைக்கப்பட்டுள்ளது.

## கஜலட்சுமி

வளமையைக் குறிக்கும் இச்சிற்பம் அநேகமாக எல்லா ஆலயங்களிலும் இருக்கும். சூரியன் கதிரால் மேகம் மழை பொழிந்து வளத்தைச் சொறியும் காட்சியே இது என்பர். அமர்ந்துள்ள லட்சுமியின் இருபுறமும் நின்ற யானைகள் இருக்கும். இது எழுமாத்தூர்ச் சிற்பம்.

## நந்தி

சிவ கணங்களின் தலைவராகிய நந்தியை ஆலயங்களின் முன்பு பிரதிட்டை செய்வது சிவாலய அமைப்பு முறைகளில் ஒன்று.

தஞ்சையில் இராசராசன் அமைத்த நந்தி புகழ் பெற்றது. ஈரோடு வட்டம் இராமநாதபுரத்திலிருந்தும், தாராபுரம் வட்டம் அவினாசி பாளையத்திலிருந்தும் இரண்டு நந்திகள் இங்கு வந்துள்ளன. கம்பீரமான தோற்றத்துடன் விளங்கு பவை. அவினாசி பாளையம் நந்தியில் மணிகளும், நெற்றிச் சுட்டியும் கண்டு மகிழத் தக்கவை. இராமநாதபுரம் நந்தியும் நுட்பமான வேலைப்பாடு மிக்கவை. இவை இரண்டும் கி. பி. 12,13 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை.

## சேட்டை

ஜேஷ்டா தேவி எனப்படும் தூக்கக்கடவுளின்பண்டைய சிற்பமும் இங்கு உள்ளது. மூதேவி என்றும் கூறுவர். திருக் குறளில் தவ்வை[தமக்கை, அக்கா]என்று கூறப்படுவது இச் சேட்டையைத்தான்.

சேட்டையின் ஒரு புறம் மகளும் மற்றொரு புறம் எருமை தலையுடன் மகனும் அமர்ந்த நிலையில் உள்ளனர். சேட்டை யின் கையில் உள்ள துடைப்பத்தின் மேல் காகம் அமர்ந்த தோற்றம் இருக்கும் அப்பகுதி சிதைந்துள்ளது. பழமங்கலம் நத்தக்காட்டில் இச் சிற்பம் கிடைத்தது.

## சூரியன்

ஆலயங்களில் சூரியனையும் தெய்வமாக்கி வழிபடுவது நம் சமய மரபு. பழங்காலந் தொட்டே சூரியவழிபாடு உண்டு. ரிக் வேதத்தில் கூடச் சூரியன் வழிபாடு உண்டு என்று கூறுகின்றனர்.

சூரியனை முழு முதற் கடவுளாகக் கொண்டு ஒரு சமயமே உண்டு. அதனைச் சௌரமதம் என்பர். ஆலயங் களில் தனியாகவும், நவக்கிரகங்களில் ஒன்றாகவும் நாம் சூரியனை வைத்து வழிபடுகின்றோம்.

தஞ்சை மாவட்டம் சூரியனார் கோயிலிலும் வட இந்தியாவில் கோனாரக்கிலும் சூரியனுக்குத் தனிக் கோயில்கள் இருக்கின்றன. சிலம்பில் சூரியன் கோட்டத்தை காணுகின்றோம்.

பெருந்துறை வட்டம் பாலதொழு உடையார் தோட்டத்திலிருந்து ஒரு அழகிய சூரியன் சிலை வந்துள்ளது. சிறு சிலையாக இருந்தாலும் மிகச் சிறப்பானது.

சூரியனின் இரண்டு கைகளிலும் இரண்டு தாமரைகள் இருக்கின்றன. அவை மலராத நிலையில் உள்ளன. அவற்றை மலர வைக்கத்தானே சூரியன் வருகின்றான்.

சூரியனுக்குப்பின் பிரபை போன்று ஒளிவட்டம் நன்கு காட்டப்பட்டுள்ளது. அழகிய கருங்கல்லில் செய்யப் பெற்ற அச்சிற்பம் கி. பி. 13ஆம் நூற்றுண்டைச் சார்ந்தவையாக இருக்கலாம்.

## ஈங்கூர்ச் சிற்பம்

மேல்கரைப் பூந்துறை நாட்டில் ஈங்கையூர் என்றுபெயர் பெற்றிருந்த ஊர், இன்று ஈங்கூர் என்று பெயர் பெற்று விளங்குகிறது. அங்கு கிடைத்த அழகிய அய்யனார் சிற்பத் திற்கு அருகே குட்டைத் தோட்டத்தில் மற்றுமொறு அரிய சிற்பம் கிடைத்துள்ளது.

மேலோட்டமாக பார்த்தால் அது சாதாரண நடுகல் போல் தோற்றமளிக்கும். ஒரு வீரனும் அவனால் கொல்லப் பட்ட நான்கு உருவங்கள் போலவும் தோற்றமளிக்கும்.

ஆனால் அச்சிற்பம் நடுகல் அல்ல என்று சேலம் அரும் பொருட்காட்சியகக் காப்பாட்சியர் கே. இலட்சுமி நாராயணன் கருதுகின்றார்.

கையில் வாள் அல்லது கேடயம் இல்லை. ஒரு கையில் வளைந்த தடி மட்டும் உள்ளது. மற்ற நடுகல் சிற்பங்கள் போல அந்தச் சிற்பம் நின்ற நிலையிலோ அல்லது போர் செய்யும் நிலையிலோ இல்லை. கால்களை அகற்றி ஒரு விநோத நிலையில் உள்ளது.

சாளுக்கியர் சிற்ப அமைப்பில் அது காணப்படுகிறது. சைவ சமயத்தின் பல உட்பிரிவுகளில் ஒன்றான லகுலீச

சைவ அடியார் [முனிவர்]போல் அச்சிற்பம் தோற்றமளிக்கிறது என்பது அவர் கருத்து. அருகில் இருப்பது அவருடைய நான்கு அடியார்கள் போலும்.

அச்சிற்பத்தின் விநோதமான இருக்கைத் தோற்றத்தைக் காணும் போது அது தந்திரீயக் கலையுடன் தொடர்புடையதாகக் காணப்படுகிறது.

## அடியார் சிற்பங்கள்

வணங்கும் நிலையில் பெண் அடியவர் சிற்பம் பவானி ஆற்றங்கரையில் இருந்த சிறு சிற்பம். தாரமங்கலம் கெட்டி முதலியார் காலத்திய சிற்பமாக இருக்கலாம். பெண்ணின் நெற்றியில் நாமம் இருப்பதால் பெருமாள் கோயில் சிற்பமாக இருக்கலாம். தாரமங்கலம் கெட்டி முதலியாரின் மனைவி சின்னம்மையாராக இருக்கலாம்.

கையிலே சூலமும் மற்றொரு கையில் சிறு கபாலமும் தாங்கிய பிற்கால அடியவர் சிற்பம் ஒன்று கொடிமுடியில் கிடைத்தது.

வணங்கிய நிலையில் உள்ள சிறிய சிற்பம் ஒரு கல்லின் மூலையில் அழகாகச் செதுக்கப்பட்டுள்ளது.குறுநில மன்னர் போன்ற தோற்றமளிக்கும் இச் சிலையும் கொடுமுடியில் கிடைத்ததுதான்.

கணவனும் மனைவியுமாக இருவரும் இறைவனை வணங்கும் சிற்பம் தாராபுரம் வட்டம் கீரனூரில் கிடைத்தது. தங்கள் குல தெய்வத்தை வணங்கும் வேளாளர் குலச்செம்மல்கள் ஆவார்கள் இவர்கள்.

## பணிப்பெண்

கோயிலில் கவரி வீசும் நிலையின் நின்ற கோலத்தில் உள்ள பணிப்பெண் புதுமையான தலையலங்காரமும்அழகிய தோற்றமும் உடையவள்.

மாமல்லைக் கடற்கரைக் கோயிலில் உள்ள அமைப்பைப் போன்ற சிற்பம். வடநாட்டுக் கலைப்பாணி இதில் உள்ளது என்பர். ஏறத்தாழ கி. பி. 11ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சிற்பம் கொடுமுடிக் காவிரியில் கிடைத்தது.

## ஊர்க் காவலர்

கையில் வேல் ஊன்றிய நிலையில் உள்ள காவலர்சிற்பம் கொடுமுடியில் கிடைத்தது. காலம் கி. பி. 12ஆம் நூற்றாண்டாக இருக்கக்கூடும்.

## கோயில் சிற்பங்கள்

கோயிலில் சுவரும், மேல் விதானமும் சந்திக்கின்ற இடங்களில் அழகுக்காக வைக்கப்படும் சிற்பம். முனிவர் தேவமகளிர், பூதகணங்கள், போர்க்காட்சி ஆகியவை சிறிய அளவில் சித்தரிக்கப்பட்டுள்ளன. ஈரோடு வட்டம் இராம நாதபுரத்தில் கிடைத்தது.

தூணின் மேல் வைக்கப்படும் மற்றொரு சிற்பமும் அங்கேயே கிடைத்தது. விலங்கு, மலர் போன்ற வேலைப் பாடுகளும், அழகிய யானை, யாளி, பசு இவைகளைக் காணலாம். இவற்றின் காலம் கி. பி. 13 ஆம் நூற்றாண்டாக இருக்கலாம்.



ஏடும் எழுத்தாணியும்



எழுத்தாணியால் எழுதும் முறை



சேமர் நடுகல்



கண்ணப்ப நாயனார்

# [16] கலைமகள் கண்ட காவலர்

## ஐயா அவர்கள் நினைவுச் சின்னம்!

கலைக்கூடம் காண வருகின்றவர்களின் கருத்தினைக் கவரும் வண்ணம், அழகியமண்டபத்தின் நடுவே கம்பீரமான தோற்றத்தோடு, கருணை பொழியும் கண்களுடன், நிமிர்ந்த நன்னடையுடனும், நேர்கொண்ட பார்வையுடன் சிலையாக நின்று நிலைத்து வாழ்கின்றார் நம் ஐயா அவர்கள்.

கலைமகள் கலைக்கூடம் ஐயா அவர்கள் கண்ட கனவு! அக்கனவு நனவாகி, நாடும் ஏடும் நல்லறிஞர் உள்ளங்களும் பாராட்டும் பாங்கினைக் கண்டு உளம் பூரித்து உவகை கொள்ளுகின்றார், சிலையாக நிற்கும் செம்மல் நம் ஐயா அவர்கள்!

கலைக்கூடமே அவருக்கொரு நினைவுச் சின்னம்தான் தான் உருவாக்க நினைத்த கலைக் கூடத்தில் தானும் ஒரு கலைச் செல்வமாக மாறிக் காட்சியளிக்கின்றார் ஐயா அவர்கள்!

கலைக்கூடம் காண்பவர் அனைவரும் வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வான் உறையும் - ஏன் கலைமகளிலே உறையும் தெய்வமாகிய ஐயா அவர்களின் சீர்மிகு நினைவுச்

சின்னமாம் சிலையையும் செம்மலின் கல்வெட்டு வாசகத்தையும் கண்டு கண்ணீர் அஞ்சலி செலுத்தி செல்லுகின்றனர்.

கல்வெட்டுக்களிலும், அதன் தொடர்களிலும் ஆழமாக ஈடுபாடு கொண்ட நம் ஐயா அவர்கள் 1970 ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் நடைபெற்ற வெள்ளிவிழாவில் அளித்த செய்தி கல்வெட்டுத் தொடர்போலவே உள்ள அமைப்பைக் காணுகிறீர்கள்.

"இந்தப் பள்ளிக்கு எனக்குப் பின்னால் உறு துணையாக இருப்பவர்கள் பாதம் என் தலை மேல்.

இந்த நிலையத்திற்கு எந்த வகையிலும் ஊறு நேராதபடி ஒரு சிறு துரும்பளவு உதவி செய்தாலும் கூட என் ஆன்மா சாந்தியடையும்.

என் உயிர் முழுவதும் இந்நிலையம்தான். இறந்த பின்னும் கூட நான் இதைக் கண் காணித்து வருவேன்"

இந்த இறவாப் பொன்மொழிக்கேற்ப எங்கள் எல்லா முயற்சிகளிலும் தோன்றாத் துணையாக அருமை ஐயா அவர்கள் இருந்தார்கள் - இனியும் இருப்பார்கள் என்றே நாங்கள் நம்புகின்றோம்.

ஐயா அவர்களின் திருவுருவச் சிலையின் கீழ் இன்னும் பல கல்வெட்டுக்கள் கலைமகள் குடும்பத்தினரால் இன்று பலரும் காண வெட்டி வைக்கப்பட்டுள்ளது.

## FROM IYYA'S WILL

''THE NAME OF KALAIMAGAL KALVI NILAYAM SHOULD NOT BE CHANGED FOR ANY REASON EVEN TO HONOUR ME. I HAVE DEDICATED THE NILAYAM TO THE PUBLIC OF ERODE. I WANT THE PUBLIC TO RENDER ALL HELP FOR ITS WELFARE.''

7 - 11 - 1969

## MY MESSAGE TO TEACHERS

WORK FIRST, MONEY NEXT,
YOU ARE GOD'S CHILDREN.
MONEY FIRST, WORK NEXT,
YOU ARE DEVIL'S CHILDREN
CHILDREN ARE LIVING SOULS,
MAKE THEM NATIONS ASSETS.

## எனது இலட்சியம்

"மனமே
பிறக்கும் போது நீ அழுதாய்
பிறர் சிரித்தார்கள்;
ஆனால்
இறக்கும் போது நீ சிரி;
பிறர் அழட்டும்."

ஐயாவின் கருத்தாழமிக்க இத் தொடர்கள் நம்மை வழி நடத்திச் செல்லட்டும்!

# [17] SCIENCE LABORATORY

## A KEY TO MODERN MARVELS

MARINE MARVELS

Phylum )
Porifora) Cup sponge
Phylio Spongia
Basket star-
Gorgono cephalus sp

PHYLUM
COELENTERATA

Sea Anemones
Sea Fans
Alcionarian Stu·leroites
Corals - Different Types

NEMATODA - Ascaris

Annelida - Nereis
- Leech
Mollusca - Siphon
Gastrochena
Oyster
Sepia - Cuttle Fish
Octopus
Coral Boring - Bivalue
with Extended

ECHINODERMATA

Star fish - Varieties
Sea Urchin
Sea Cucumber
Brittle star
Sand Dollars

FISH

Shark - Hammer
Headed Shark
- Dog Fish
- Tiger Fish
Shark - Ordinary
Cow Fish
Porcupine Fish
Ray Fish - Narcine
Sting Ray- Trygan
Archer Fish
Pipe Fish - Sygnathides
Sp
Garzepidasteus-Sp
Anacanhus - Barbulus
Sucker Fish-
Marine eel - Dotted
Marine eel - Ordinary
Eel - Common
Hippogampus

ARTHROPODA
Marine prawn
Prawns
Millipedes
Centipedes
Crayfish - Astacus
Lobster
King Crab
Hermit Crab
Dhobi Crab
Gelesiomus
MAMMALIA
Bats
Abnormal Head of a Buffalo's Calf
FOETUS

| | | |
|---|---|---|
| Cow | 90 | Days |
| Buffalo | 60 | Days |
| | 90 | Days |
| | 120 | Days |
| | 180 | Days |

HUMAN
(60 Days) Two Months
(120 Days) Four Months
Fish Egg Garland - Egg Mass of Hemirhampus
Egg Cone of a deep sea Mollusea
Egg Capsule
Tail of Trygan - 5'
Upper Jaw of Sword Fish 5'
PARTS OF HUMAN BODY
H art
Spleen
Lungs
Small Intestine
Large Instestine
Kidney

RAPTILIA
Codra
Rattle Snake
Viper
Exo Skeletons of Turtles
WORKING MODELS
Atom
Floral Diagram-Teaching Aid
Film Strip Projector
Day Light Screen
Radio Receiver
Radio Transmitter
Digestive system of man
Blood circulation of man
DIORAMAS
1. Forest Living Animals
2. Animals Found near water

## [18] மிருகக் காட்சி சாலை

கலைமகள் கல்வி நிலையத்திலுள்ள மிருகக் காட்சி சாலை சிறியதாயினும் மாணவ மாணவிகளுக்குப் பெரிதும் பயனுள்ளதாய் உள்ளது. இங்கு மான்கள், குரங்குகள், கிளிகள், மயில்கள், மணிப்புறாக்கள், முயல்கள், வண்ணச் சிட்டுக்கள், கினிகோழிகள், வெள்ளெலிகள், சீமை எலி, காடை மீன்கள் ஆகியவை தனித்தனிக் கூண்டுகளில் தக்க வசதிகளுடன் பராமரிக்கப்பட்டு வருகின்றன. பறவைகள் மிருகங்கள் பெயர்களைப் பற்றி முதன் முதலாகப் படிக்கும் L.K.G,U.K.G., மாண்டிசோரி குழந்தைகள் வகுப்பு நேரங் களில் இங்கு அழைத்துச் செல்லப்படுகிறார்கள். குழந்தைகள் நேருக்கு நேர் பார்க்கும் போது அவற்றின் உடலமைப்பு, நிறம், பழக்க வழக்கங்கள் முதலியவற்றைப்பற்றி நன்கு தெரிந்து கொள்ள வாய்ப்பு ஏற்படுகிறது. விளையாட்டாகவே இக்குழந்தைகள் கிளி, முயல், குரங்கு, மான் ஆகியவை உண்ணும் விதம், ஓடி ஆடி விளையாடும் விதம் முதலிய வற்றைத் தெரிந்துக் கொள்வதோடு மட்டுமன்றி நன்கு ஆர்வத்துடன் இரசித்துக் கண்டு களிக்கிறார்கள். அறிவு பூர்வமான விருந்து அழகாகப் படைக்கப்படுகின்றது.



பலவண்ணப் பறவைகள்




அறிவியல் கூடத்தின் ஒருபகுதி



பதன் செய்யப்பட்ட
பறவைகள், விலங்குகள்



பதன் செய்யப்பட்ட
பறவைகள் — விலங்குகள்



நிறுவனர் திரு. சீ. மீனாட்சி
சுந்தரம் அவர்களுடைய
வெண்கலச் சிலை

# 19. பிற்சேர்க்கை

[1]

**பவானி வட்டம், வேம்பத்தி கிராமம் வேட்டுவன் தோட்டக் கல்வெட்டு:**

ஸ்வஸ்தி ஸ்ரீகோவிராச கேசரி பன்
மராகி[ய] ஸ்ரீ ராஜேந்திர சோழ தேவர்க்குத் திரு
வெழுத்திட்டுச் செல்லா நி[ன்]ற யாண்டு நா
லாவது சையமுரி நாடாழ்வார் நாட்டு வ
ட கரை விக்ரம் பலவபுரத்து நகரத்து
வளஞ்சிரிகர்க்கு வீரபட்டணம் செ[ய்]து குடு
த்தோம் நாடாழ்வாரை வெட்டின மதிரை
இருக்கும் பிராந்தக தேவன் நான் கொறு ம
ண்டல உயக் கொண்டானும் முசிறியான
முமுடிச் சோழபுரத்தில் தந்திர சோழ முத்தரை
யனை வெட்டின பிழைக் கண்டழியும்
தொண்டை நாட்டில் தூரல்லூர் இருந்து ஆளு
றவணை வெட்டின எறியும் விடங்க செட்
டியும் பாண்டி நாட்டில் கல்லக நாட்டி
காக்கையானதுள் கோதை சோலையான் படை

நாயகனை வெட்டின வீரகளம் தலையும்
பருத்திப் பள்ளி நீர்ந்த ராஜேந்திர சோழப் பெருனீர
வீர மாணிக்கச் செட்டியும் சேந்தன் திருக்குர
வாழ் நானுதேசியக் கவரை விடங்க
கஞ் சாத்தன் பாலையான் திகையாயி
ரத்தைஞ் ஞூற்றுவப் பிள்ளை க
ண் டழியும் அரையம் மாயிலிட்
டியான் வீரகளம் தலையும் சிங்க
மூரநான அஞ்ஞூற்றுவ வேளானு
ம் அஞ்சுகரை நாட்டுக் கவரை விடங்
கனும் கவரை களமார் வத்துமா
லையும் வீரகளமார் வத்து மாலையு
ம் வீரபுத்திரனும் முனிவர் சிங்க மு
ம் வலங்கைமார் வத்து மாலையு
ங் கவறை செய்யக் கொண்டானும்
பிள்ளைச் சித்திர வாளியும் மடிகைக் க
ண்டழியுமாரும் வாடாப் பூவும் தெ
ண்டிக் காசைக் காழமுத் தலைக்கு
தினச்சித்திர வாளியும் பிள்ளைப்
பவுத்திரனும் எறியும் விடங்க செட்
டியும் இவ்வூர்ப்படி இவ்வூர் மாடும் ஊ
ர்க்குக் குடுத்த தர்மமும் இவ்வூர் வீர
சாசனம் செய்தோம் இவ்வனைவோ
மும் உள்ளிட்ட வீர பெருன்னீரவியாரே
ாம் இத்தன்ம மிறக்கினுன் கெங்
கையிடை குமரியிடை எழுந்நூற்றுக்
காவதத் துள்ளார் செயித பாவ

ம் கொள்வார் நோக் கொண்ட வீர
புரமாவதாகவும் இப்பரிசே
பட்டணம் செய்தோம் இவ்வனை வோமுள்ளி
ட்ட வீர பெருன்னீரவியோம் அறமறவற்க.

[2]

ஈரோடு வட்டம், பழமங்கலம் - நத்தக்காட்டில் கிடைத்த கல்வெட்டு:-

ஸ்வஸ்தஸ்ரீ திசை
யாயிரத் தைஞ்ஞூ
ற்றுவ நாநாதேசிய
டைக்கலம் கிழங்க
நாட்டு நித்த விநோத
த் திருந்து வாழும் வெ
ள்ளாளர் வெண்டுவ்வ
ன திருக்குறையான்
எடுப்பிச்ச மாநகரம்
..........

[3]

பெருந்துறை வட்டம் ஈங்கூர் குட்டைத்தோட்டம் கல்வெட்டு:-

ஸ்ரீ நன்மங்
கலஞ் சிறக்க
ஸ்ரீ கொலோத்
துங்க சோழதே

வர்க்குத் திருவெ
ழுத்திட்டுச் செல்
லாநின்ற திருநல்லி
யாண்டு ஏழாவது
மேல்கரைப் பூந்து
றை நாட்டு ஈங்கை
யூரிலிருக்குங் காவி
லந் குறும்பில்லரில்
போத்தன் செய்யானுன .
குலோத்துங்கப் பல்லவரையனேன்
அய்ய நாரை எழுந்தருளு வித்த தன்மம்.

## [4]

ஈரோடு வட்டம், அறச்சாலைபம்மன் கோயிலில் வாயிற் படியாக இருந்த கல்வெட்டு:-

............
வீகர
ஞ்சிறக்
ங்கல
நன்ம
ன்மம்
ண்டத
யன்க
லவரா
............

[5]

பவானி வட்டம், எண்ணமங்கலம் புங்கமடுவு வாவித் தோட்டத்திலிருந்து வந்துள்ள கல்வெட்டு:-

சுப மஸ்து
ஸ்வஸ்த ஸ்ரீ
வீரவல்லாள தே
வர் பிருத்வி ராஜ்ய
ம் பண்ணி அரு
ளா நின்ற சீமுக
வருஷத்துப் பங்
குனி மாதம் ௩0
தேதி வடகரை நா
ட்டில் சிலம்பூரி
ல் தாயினுர் பந்தீ
ஸ்வர முடையார்
இறங்கலாய்க் கி
டக்கையில் இ
வ்விறங்கல் மீ
ட்டு பிறதிட்டையு
ம் பண்ணி அ
முது படிக்கு இ
வ்வூரில் நிலத்
திலே ஞயினுர்
கொல்லருக்கு இந்
நிலம் கீழ் பாற்

கெல்லை இட்டே
றிக்கு மேற்கு இ
தன் வடபாற்
கெல்லை வம்ம
கவுண்டன்
நிலப் பொமி
க்குத் தெக்கு இத
ன் மேல்பாற்
கெல்லை ஆ
ற்றுக்குக் கிழக்
கு இதன் தெ
ன் பாற் கெல்லை
ஊர் மதிளு
க்கு வடக்கு
இன்னான்
கெல் லைக்
குட்பட்ட நி
லம் மிக கவி
யம் இறையி
லியே
போ க
மாகக் கல்
வெட்டிக் கு
டுத்தோம்
இவ் ஊர்க்
காணியு
டைய கு

றும் ப(ர்) க
ளோம்
இப்படி
க்கு சிலம்
பகவுண்ட
ன் இவி
பந்தன் எ
ழுத்து இவ
ன் தம்பி இர
ாசாக் கவுண்
டன் எழுத்து
இவன் தம்
பி சொண்
ண கவுண்
டன் எழுத்து
இவன் மகன்
பெரி யப்பன்
குப்பன் எழு
த்து இப்படி
க்கு பெரிய
மாரு சொண்
ணன் எ
ழுத்து இப்ப
டிக்கு பெரிய
மாரு வகு
த்தன் எழுத்
து பெரியமக

பூதன் எழு
த்து காரிரா
மன் இராம
கவுண்டன்
எழுத்து இப்
படிக்கு இவர்
கள் சொல்ல
இக்கைய் எ
ழுதின் படிக்
கும் இந்தக்கல்
வெட்டுப் பாரி
சம் எழுதி
னேன் நடு
விக்கவுண்
டன் பந்தி
யப்பனேன் ச
ந்திரா தித்துவ
ரை நடத்திக்
குடுப்போமா
கவும் இத்த
ன்மம் செலு
த்துவான் சீ
பாதம் தலை
மேலே யித்
தை யிற
ங்கல் செ
ய்வான் வழி

யேழெ
ச் சம்
மறுவா
ன்

[6]

ஈரோடு வட்டம், சிவகிரி கவுண்டன்பாளையம் நத்தக் காடு நடுகல் கல்வெட்டு:-

தலை நல்லூ
ரில் கிழங்
க வேட்டு
வரில் கிழ
ங்கன்
பெரிய கி
ழங்கன்

[7]

ஈரோடு வட்டம், இராமனாதபுரத்திலிருந்து வந்துள்ள சிதைந்த கல்வெட்டுத் துண்டுகள்:-

(அ)

[ச] ந்திராதித்தவற்...
[ஸெ]வத்த பொன் நகரக்....
சந்திராதித்தவற் பெ....
கலவ ரிசியும் துப்பரு....
புழுக்கறி ஒன்று மறுக்கற்....

(ஆ)

ளும் கீழிறை சிற்ருய[ம்]
மொண்டு சந்திராதித்தவ[ல்]

(இ)

இவற்கு ஒட்டச்சு ஆராட்.சித்[தேவை]
.... ந்த குடுத்தோம் இப்படிக்கு
[காலிங்க] ராயன் எழுத்து இவை விழுப்....

(ஈ)

யில் திரு மடைப்பள்ளி
இராசராச புரத்தி[ல்]
யில் தேவதானம்

(உ)

திருநல்லி [யாண்டு]
[க]ண்ணரில் பார
[வே]வட்டுவரில்
.............நின்று

(ஊ)

கச்சிய ராயன் எழுத்து இவை காலிங்க
[ராயன்]

(எ)

டிபட்ட... பாண்டிய மண்டலத்துத்த....
ரைசைய்...லே புகுந்திருந்து நாயனுர் பற்....
ஊ திருவடி தொழுவித்...
க் குடுத்தேன் கண்டிய தேவ[ன்]

(ஏ)

[விக்]கிரம சோழ தேவற்குத் திரு
அவ்வூரில் வத்த மதுர
மந்தகரும் ஒன்றுள் நல்ல
சந்திய் முட்டாமல் இரண்டு வி

(ஐ)

சுவத்தி கோனேரின்மை கொண்டான் ஸ்ரீவிக்
ஆசிக்கிற காணியாளன் தேவகன்மிகளில்
கரியபிள்ளை

சுவும் சோறு மாட்டென்று நலியாத படியுஞ்[சாத்தி]
[இர]ண்டு விளக்கு முன்பு செல்லும் விளக்கு தவிர
மூன்று

(ஒ)

நாலாவது பூந்துறை நாட்டு மங்கலத்தில்
ரான வீரபாண்டிய நல்லூர் நான் [கெல்லை]

(௬)

தேவரான கண்டிய தேவன் பூந்துறை
....ண்டுகளில் தேவனான வீரபாண்
.........கல்லி வஞ்.........

[8]

பவானி வட்டம் - பருவாச்சி-சூலக்கல் கல்வெட்டு:-

பருவாச்சியா
ன அகளங்க
நல்லூர் வட
கரை நாட்டா
ர் ரக்ஷை.

[9]

பவானி வட்டம் - பருவாச்சிக் கல்:-

ஸ்ரீநன்மங்கலஞ் [சிறக்க]
ஸ்வஸ்தஸ்ரீ வீர வ[ல்லாள]
தேவர் திருவரா[ச்சியம்]
பண்ணியருளா நின்ற
த்து மாசி மாதம்
(வடகரை) நாட்டுப் பரு
நல்லூர்
கள்

[10]

ஈரோடு நகர் கச்சேரி வீதியில் கிடைத்த கல்வெட்டு:-

...னுங் குமரன் வருபுனலும் வைத்தகல்
...கண்டம் பிடாரியான் செம்பியன்

ஈரோடு வட்டம் கொல்லம்பாளையத்தில் கல்வெட்டு:-

1. ஸ்ரீ கோவிரவி கோதைக்குத் திரு
உ. வெழுத்திட்டுச் செல்லா நின்ற யாண்டு
3. எண்ணூற்றெழுபது இவ்வாண்டு
4. இவ்வூர் வாழும் வேளாந் மணியன்
5. இன்னும் வெள்ளாழர் கலிவிலங்
6. வெள்ளாளந் கன்னணிழுரிய
7.
8. வழிமேல்
9. முன்பும் பின்பும்
10.
11. நிலவெட்டியான
12. தென்னவன் பேரரையனாயினவ
13. ஞ்சி வேள் தாழிக்கு அவனும் குளம்
14.
15. வைத்தான் கழஞ்சின் வாய்
16. க் கலநெற்பலிசையாக ஆண்டு
17. தோறும் பதின் கலநெல்லு
18. தோண்டு குளம்
19. வைத்தான் சந்திராதித்த வரை
20. தென்னவன் பேரரையனு
21. இன வஞ்சி வேள்டாழி வைத்தான்
22. தாழி ஏரி என்பது இது காத்
23. தானடி என் தலை மேலின இறக்கினு
24. ன்வழி ஏ(ெ)ழச்சமறுவ்வான்








**கொடுமணல்**

சுடுமண் மணிகளும்
விளையாட்டுப் பொருள்களும்



கொடுமணல்
சுடுமண் விநாயகர்
(முன்பக்கம்)



(பின்பக்கம்)



கொடுமணல்
சங்கு வளையல்கள் - சுடுமண்பாசிகள்
வெண்படிகக் கற்கள்



கொடுமணல்
மண்பாண்ட ஓடுகள் – கல் ஆயுதங்கள்
(கிராபிடி மார்க் – கோடுகள் உள்ளவை
வண்டிச் சக்கரங்கள்)

# 20. கொடு மணல் - ஒரு சங்ககாலப் பேரூர்!

பெரியார் மாவட்டம் —பெருந்துறை வட்டத்தைச் சேர்ந்த ஒரு சிற்றூர் கொடுமணல். சென்னிமலைக்குத் தென்மேற்கில் 15 கி. மீ. தூரத்தில் நொய்யலாற்றின் வடகரையில் இன்று கொடுமணல் உள்ளது. கொங்கு 24 நாடுகளில் ஒன்றான குறுப்பு நாட்டைச் சேர்ந்தது அவ்வூர்.

கொடுமணல் அருகே உள்ள தம்பிராட்டிபாளையம் நாச்சிமுத்துப் புலவரிடம் சில ஓலைப்பட்டையங்கள் உள்ளன. அவற்றின் மூலம் தென்குறும்ப நாடு என்றபகுதி வீரசோழபுர வள நாடு என வழங்கிற்று என்றும் அந்நாடு கொடுமணல் உள்ளடக்கிய ஏழு ஊர்களைக் கொண்டது என்றும் அறிகின்றோம்.

சங்க இலக்கியத்தில் ஒன்றான பதிற்றுப்பத்தில் இரண்டு பாடல்களில் கொடுமணல் என்ற ஊரும், அங்கு செய்யப்படும் அழகிய அணிகலன்கள் பற்றிய குறிப்பும் வருகின்றன.

'கொடு மணம் பட்ட வினைமான் அருங்கலம்' (74)

'கொடு மணம்பட்ட ...நன்கலம்[67] என்பன அப் பதிற்றுப்பத்து வரிகளாகும்.

மற்றொரு பதிற்றுப்பத்துப் பாடலில் (48) வேனிற் காலத்தில் காஞ்சியாற்று ஓரமக்கள் வீட்டில் இருக்காமல் தம் சுற்றத்தாருடன் காஞ்சி ஆற்றுக் கரைகளில் உள்ள சோலைகளில் தங்கி விழா எடுத்துப் பொழுது போக்கு வார்கள் என்ற குறிப்பு வருகிறது. (காஞ்சி— நொய்யலின் பழம் பெயர்) நொய்யலாற்றின் இரு கரைகளிலும் பரந்து கிடந்த பேரூராகக் கொடு மணல் முன்பு இருந்ததற்கான அடையாளங்கள் காணப்படுகின்றன.

சங்ககாலக் கொடுமணம்தான் கொடுமணல் என சில புலவர்கள் (சென்னிமலை புலவர் சு. வேலுசாமி) பெயர் ஒப்புமை கருதிக் கூறினாலும், தக்க சான்றுகள் இன்றி அறிஞர் உலகம் ஏற்றுக் கொள்ளாமல் இருந்தது.

அண்மையில் கலைமகள் தொல்பொருள் கலைக்கூடத்தின் சார்பில் செல்வி எம். முத்தையா பி. ஏ. பி. டி., அவர்களும், கல்வெட்டு ஆய்வாளர் புலவர் செ. இராசு, எம். ஏ., அவர்களும் கொடுமணல் சென்று பல அரிய பொருட்களைத் தேடிக் கண்டு பிடித்திருக்கின்றனர். அப்பொருட்கள் ஆதாரங்களோடு இன்றைய கொடு மணல் தான் சங்ககாலக் கொடுமணம் என்பதைத் தெளிவாக அறிவிக்கப் போதுமானதாக உள்ளன.

சங்க நூலெங்கும் சங்குகளை அறுத்து வளையலும் பல்வேறு ஆபரணங்களும் செய்தமைக்கான குறிப்புக்கள் இருக்கின்றன. கொடுமணலில் பல சங்குவளையல்கள் கிடைத்திருக்கின்றன. அவை அரிய வேலைப்பாடு கொண்டவை. கறுப்பு, கறுப்பு சிவப்பு வெள்ளைக் கோடுகள் உள்ள வளையல்களும் கிடைத்திருக்கின்றன.

பவளத்திலும், கற்களிலும் செய்யப்பட்ட பல்வேறு மணிகளும், பதக்கங்களும் கொடு மணலில் கிடைத்திருக்கின்றன.

வெள்ளை சிவப்புக் கோடுகளுடன் கொங்கு நாட்டுக்கே உரிய அழகிய பானை ஓடுகளும் இங்கே பல கிடைத்திருக்கின்றன. ஆனால் கொடி போன்ற மலர் ஓவியம் தீட்டப் பெற்றும் அழகிய முத்திரைகள் பதிக்கப்பட்டும் உள்ள பானை ஓடுகள் இங்கே கிடைத்திருப்பது மிகச் சிறப்பானதாகும்.

சிறுவர்கள் பயன்படுத்திய வண்டிச் சக்கரங்களும் ஓட்டுச் சில்லுகளும் கிடைத்துள்ளன. குறியீடுகள் (கிராபிடி) உள்ள பானை ஓடுகள் பல கிடைத்தன. செதுக்கப்பட்டு அழகிய முறையில் அணிகலன் செய்யப் பயன்படுத்திய வெண்படிவக் கற்கள் கிடைத்துள்ளன.

நுண்கற்காலக் கருவிகளும், பழங்காலக் கருவிகளும் இங்கு கிடைத்துள்ளமை அரிய கண்டுபிடிப்பாகும்.

5 செ. மீ. உயரத்தில் கிடைத்த சுடுமண் விநாயகர் மிக அரியதாகும். கி. பி. 7 ஆம் நூற்றாண்டில் பல்லவர் காலத்தில் வாதாபிகொண்ட சிறுத்தொண்டருக்குப் பின்னரே தமிழகத்தில் விநாயகர் வழிபாடு புகுந்ததாக ஒரு கருத்து ஆய்வாளரிடையே நிலவுகிறது. ஆனால் ஏறத்தாழ 2500 ஆண்டு கட்கு முன்பே இவ்வழிபாடு தமிழகத்தில் நிலவியது என்பதை இவ்விநாயகர் உருவம் மெய்ப்பிக்கிறது.

கலப்பையினால் உழுகின்ற போது ஒளி வீசக்கூடிய மணிக்கற்கள் வெளிப்படும் என்ற பதிற்றுப்பத்து (பாடல் 58) வருணனைக்கு ஏற்ப மேல் பரப்பிலேயே வண்ணக் கற்கள் இங்கு அகப்படுகின்றன.

சங்க காலத்தில் உரோமானியருக்கு பலவண்ண மணிகள் அளித்த படியூர் கொடு மணலிலிருந்து சுமார் 6 கி. மீ. தூரத்தில் இருப்பது குறிப்பிடத்தக்கது.

எனவே பண்டைக் காலத்தில் காஞ்சிமாநதிக் (நொய்யல்) கரை நாகரிகம் ஒன்று மிகச் சிறப்பாக இருந்தது என்பதை விளக்க போதுமான சான்றுகளாக இவை திகழுகின்றன. இவை அரப்பா, மொகஞ்சதாரோ நாகரீகத்திற்கு இணையானவை.

அருகே பழங்காலத்தில் கட்டப்பட்ட நொய்யல் அணை அருகில் உள்ளது. (32 அணைகள் நொய்யலில் இருந்ததாகச் சோழன் பூர்வ பட்டயமும் பிற பாடல்களும் கூறும்)

'ஆதி கொடு மணல்' 'தேர்ந்த கொடு மணல்'

'சிறப்பான கொடு மணல்' 'ஏர் மேவும் கொடு மணல்'

'மோது புகழ் கொடு மணல்' என்றெல்லாம் பாராட்டிப் பலபாடல்கள் கொடு மணலைக் கூறுகின்றன.

இங்குக் கிடைத்த பொருட்கள் சிலவற்றைப் பார்வையிட்ட தொல்பொருள்துறை இயக்குநர் டாக்டர் ஆர். நாகசாமி பெரிதும் பாராட்டினார். ஆய்வாளர் புது. போ. வெங்கடராமனும் இதை ஆய்ந்து தொன்மையை உணர்த்தினார்.

கலைமகள் கலைக்கூடத்தின் சார்பில் செல்வி. எம். முத்தையா அவர்களும் ஆய்வாளர் புலவர் செ. இராசுவும் தொடர்ந்து ஆராய்ச்சியினை மேற்கொண்டுள்ளார்கள்.

  

